# மக்ளீன்ஸ்

## உபயோகித்து அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்!



### இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த பற்களை வெண்மையாக்குகிறது!

MTP/LT/J/63 TMA

# பொருளடக்கம்

# கல்கி

சோபகிருது, பங்குனி 9 ★ மார்ச் 22



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



பட விளக்கம் 49-ம் பக்கம் பார்க்க

உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும்
உகந்தது

# பனாமா



Panama

20

CIGARETTES

Specially blended for a cool and pleasant smoke from selected Virginia Tobacco leaves.

# பனாமா

இழுக்க
இழுக்க
இன்பம்
இறுதிவரை

பிரத்தியேகத் தயாரிப்பாளர்கள்:
கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்.
பம்பாய்-56

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

TM

Grants' Advtg.



மலர் 23 ❋ தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் ❋ இதழ் 34

# நீதிமன்றத்தை மதிப்பார்களா?

தமிழக அரசாங்கம் விதித்திருந்த நில உச்சவரம்புச் சட்டம் செல்லுபடியாகாது என்று ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்து விட்டது. காங்கிரஸ் சர்க்காரின் பறிமுதல் சட்டங்களில் முதல் ஸ்தானம் பெற்றிருந்த நில வரம்புச் சட்டம் அரசியல் சாஸனத்துக்கு விரோதமானது என்று நாட்டின் தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது.

இந்தத் தீர்ப்பு பல ராஜ்யங்களில் செய்யப்பட்ட உச்ச வரம்புச் சட்டங்களையும் ரத்தாக்கும். சொந்தக்காரரின் பிரத்தியேகமான உழைப்பும் ஈடுபாடும் மிகமிக அவசியமான விவசாயத்தில் அரசியலைப் புகுத்தி, நிலங்களைத் துண்டாடி, யாருக்குமே நில உரிமை உணர்ச்சி இல்லாதபடி செய்து, தேசத்தின் உணவு உற்பத்தியை அதலபாதாளத்தில் தள்ளும் ஒரு சாபக்கேட்டான சட்டம் ஸுப்ரீம் கோர்ட்டின் அங்கீகாரம் பெறத் தவறியது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

முக்கியமாக விவசாயிகளும் சுதந்திரக் கட்சி அபிமானிகளும் இதைக் குறித்து மகிழ வேண்டும். ஸுப்ரீம் கோர்ட்டில் நில வரம்புச் சட்டத்தை எதிர்த்து வழக்குத் தொடுப்பதற்கு முக்கியமான காரணமாயிருந்தவர் கோவை மாவட்டச் சுதந்திரக் கட்சிக் காரியதரிசி ஸ்ரீ ஆர். கிருஷ்ணசுவாமி கவுண்டர் அவர்கள். சட்டத்தை வழக்கு மூலம் எதிர்க்காமல், அதன் நோக்கத்தை ஏமாற்றுவதாக எண்ணிக் கொண்டு, ஏராளமான நிலச்சுவான்கள் நிலத்தைச் சிறுசிறு பங்குகளாக்கி, சட்டம் அமுலாகு முன்பே நில வரம்புகள் கட்டிக் கொள்ளத் தொடங்கிய போது, இந்தச் சட்டத்தால் சற்றும் பாதிக்கப்படாத ஸ்ரீ கிருஷ்ணசுவாமி கவுண்டர்தான் நீதி விசாரணை மூலம் அதனை முறியடிக்க வேண்டுமென உறுதி பூண்டார். ஸுப்ரீம் கோர்ட் மூலம் நில வரம்புச் சட்டத்துக்குப் பரிகாரம் காண வேண்டுமென்று நில உரிமையாளர் பலருக்கு எழுதினார். ஆறு பேர்கள் அவரது யோசனையை ஏற்றார்கள். அவர்கள் தொடுத்த வழக்கில்தான் நில வரம்புச் சட்டம் செல்லத்தக்கதல்ல என்று ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்திருக்கிறது. எல்லா ராஜ்யங்களிலுள்ள விவசாயிகளும் மகிழவேண்டிய விஷயம்.

ஒரு கெட்ட காரியம் தடுக்கப்பட்ட போதிலும் இதுவரை இச் சட்டத்தால் நேர்ந்துள்ள தீமைகளை எண்ணினாலே வேதனையாயிருக்கிறது. கோவை ஸ்ரீ ஜி. கே. சுந்தரம் அவர்கள் எடுத்துக்காட்டி யிருப்பதுபோல், சுமார் பத்து ஆண்டுகளாக இந்த அநீதச் சட்டத்தை இயற்றவும் அதை அமுல் நடத்தவும் பல்லாயிரக்கணக்கான அதிகாரிகளை நியமித்துக் கோடிக்கணக்கான ரூபாயை அரசாங்கம் செலவழித்திருக்கிறது. நிலச் சொந்தக்காரர்களும் சட்டத்திலிருந்து தப்பிப்பதற்காகக் கோடிக்கணக்கான ரூபாய்களுக்கு முத்திரைக் கடிதங்கள் வாங்கி நிலத்தைக் கண்டதுண்டம் செய்து கண்டவர்களை நம்பி எழுதி வைத்திருக்கின்றனர். மீண்டும் உணவுக் கட்டுப்பாடு உண்டாகுமளவுக்குத் தானியத் தட்டுப்பாடு ஏற்பட்டிருப்பதற்கும் இச் சட்டமே முக்கியமான காரணம்.

ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்த பின்னும் நாம் இத் தீமைகள் விலகிவிடுமெனப் பூரண மகிழ்ச்சி கொள்ள இயலவில்லை. இதற்குக் காரணம், நமது காங்கிரஸ் அரசாங்கத்துக்கு நீதிமன்றத்தை மதிக்கத் தெரியாததுதான். இதுவரை சர்க்காரின் பல சட்டங்கள் அரசியல் சாஸன விதிக்கு முரணானவை என்று ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்திருக்கிறது. ஆனால் அதற்காக அராசாங்கம் அந்தச் சட்டங்களைக் கைவிட்டதில்லை. தங்களது அநியாயச் சட்டங்களுக்கும் சாஸனம் அநுமதி தருமாறு அரசியல் சாஸன




விதிகளையே ஆட்சியாளர்கள் மாற்றியிருக்கிறார்கள். அரசியல் சாஸனத்துக்கு இசையச் சட்டம் இயற்றாமல் தங்களின் சட்டத்துக்கு ஏற்றபடி சாஸனத்தை மாற்றியிருக்கிறார்கள். நீதிமன்ற அவமதிப்பு என்பது பெரும் குற்றம் என்றால் அந்தக் குற்றத்தில் தேர்ந்த திறமை பெற்றிருப்பது காங்கிரஸ் அரசாங்கம் தான். நிலவரம்புச் சட்டத்தையும் செல்லுபடியாக்குகிற விதத்தில் அரசியல் சாஸனத்தை மாற்ற வேண்டும் என்பதிலேயே ஆட்சியாளர்களின் யோசனை செல்லும். அந்த யோசனையைக் காரியமாக்கிக் கொள்ளத்தான் பார்லிமெண்டில் மெஜாரிட்டி இருக்கிறதே!

ஒரு வேளை, புதிதாக சாஸன மாற்றம்கூடத் தேவைப்படாது போகலாம். 'குதிரையும் கழுதையே; அதன்மீது அழுக்குமூட்டையை ஏற்றலாம்' என்கிற பதினேழாவது திருத்தம் சட்டமானால், அதுவே நில வரம்புச் சட்டத்தின் அபகரண கைங்கரியத்துக்கு அநுமதி தந்து விடக் கூடும். அவ்வாறு இல்லாவிடில், இனி மேல் நம் சர்க்கார் அடிக்கடி பொழுதையும் பொருளையும் வீணாக்கித் 'திருத்த' மசோதாக்கள் கொண்டு வராமல், சர்வரோக நிவாரணிபோல் தங்களுடைய எல்லாத் திட்டங்களையும் சட்டங்களாக்குவதற்காக ஒரே ஒரு மசோதாவை நிறைவேற்றி விடலாம். அதாவது, 'காங்கிரஸின் ஜனநாயக சோஷலிஸம் நிலைபெற உதவுவதாக ராஷ்டிரபதி அவர்கள் கருதும் எந்தச் சட்டமும் அரசியல் சாஸன விதிகளுக்கு உட்படாது' என்று ஒரு மசோதாவை நிறைவேற்றி விடலாம். அப்புறம் 'ஜாம் ஜாம்' என்று மாஸ்கோ மோஸ்தரில் சட்டங்கள் செய்யலாம். ஜனநாயக சோஷலிஸத்துக்கு அவை உதவுவதாக ராஷ்டிரபதியை அங்கீகரிக்கச் செய்வதும் காங்கிரஸ் சர்க்காரின் கையிலிருக்கிறது!

அல்லது நீதிபதிகளின் பதவி வீசுவாசப் பிரமாணத்தில் ஒரு புது விதியைச் சேர்க்கலாம்: 'ஜனநாயக சோஷலிஸ'த்தை ஏற்படுத்தும் எந்தத் திட்டத்துக்கும் முரணாக அவர்கள் தீர்ப்பளிக்கக் கூடாது என்பதாக. இந்த மாதிரி ராஜாஜி பரிகாச முறையில் சர்வ

ரோக நிவாரண மசோதா பற்றி எழுதியிருக்கிறார். இந்தப் பரிகாசம் சோகத்தோடு கலந்த ஹாஸ்யம்.

இப்போது நமது நீதிபதிகள் தைரியத்துடன் தீர்ப்பு வழங்கி வருகிறார்கள். ஆட்சியாளருக்கு இது சகிக்காமல், ஒய்வு பெற்ற நீதிபதிகளுக்குப் புதுப் பதவிகள் அளிப்பதன் மூலம் அவர்களுடைய சுதந்திர உணர்வைக் குலைத்து வருவதைக் காண்கிறோம். இதோடு நில்லாமல் 'திறமை வாய்ந்த நீதிபதிகள்' என்பதாகச் சர்க்கார் ஒரு பட்டியல் தயாரிக்கும் நாள் தொலைவிலில்லை. எந்த அடிப்படையில் நீதிபதிகளின் திறமையை மதிப்பார்கள் என்பதற்குக் கேள்வி முறையே இராது. அப்புறம் என்ன? நீதி மன்றத்தின் மதிப்புக் காற்றிலே பறக்கும்.

# கல்விச் சலுகை சரி; கல்விக்குப் பின்?

எஸ். எஸ். எல். சி. முடிய எல்லா மாணவர்களுக்கும் இலவசக் கல்வி அளிக்கும் திட்டத்தைக் கொண்டு வந்துள்ள முதன்மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் மக்களின் ஏகோபித்த பாராட்டைப் பெற்றிருக்கிறார். இதனால் கல்வியின் தரம் குறைந்து விடாமலும், தனிப்பட்ட கல்வி நிறுவனங்களின் வருமானம் பாதிக்கப் படாமலும் அவர் காத்துத் தர வேண்டியது அவசியம்.

இலவசக் கல்வித் திட்டத்துக்காக நாமும் ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்களுக்கு நமது நன்றியை அளிக்கிறோம். என்றாலும் கற்றபின் மாணவர்களின் நிலை என்னவது என்பதிலும் முதன்மந்திரி அவர்கள் மனத் தெளிவோடு, அச்சமின்றி ஈடுபடாவிடில் கல்வித் திட்டம் முழு வெற்றியடைந்ததாகாது என்றே கருதுகிறோம்.

நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இக்காலத்தில் வேலைக்காகவே கல்வி கற்கப்படுகிறது. மத்திய சர்க்கார் வேலைகள் நாட்டுத் தொழிலில் ஒரு கணிசமான பகுதியாகும். இந்த வேலைகளுக்கு நம் தமிழ் நாட்டு மக்கள் மற்றவர்களைப் போல் சம வாய்ப்புப் பெற்றிருக்கின்றனரா என்று முதன்மந்திரி கவனித்துக் கொள்ள வேண்டும். அப்படித் தமது ராஜ்ய மக்களுக்குச் சம வாய்ப்புப் பெற்றுத் தருவதற்காகத் தைரியத்துடன் பாடுபட வேண்



டும். இவ் விஷயத்தில் முதன் மந்திரி அவர்கள் நம்மை ஏமாற்றி வருகிறார். மிகவும் தந்திரமான முறையில் ஹிந்தித் திணிப்பு தொடங்கி விட்டது. உத்தியோகஸ்தர் பரீட்சைகளில் மற்றப் பிரதேச மொழிகளுக்கில்லாத ஸ்தானத்தை ஹிந்திக்குத் தர முயற்சிகள் நடந்து வருகின்றன. இதனால் ஹிந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் உயர் பதவிகளில் பெருவாரியாக அமரும் பாரபட்ச நிலை ஏற்படும். நமது ராஜ்ய மக்கள் கீழ்த்தரப் பிரஜைகளாகாமலிருக்க வேண்டுமானால் இது போன்ற நடவடிக்கைகளை முதன் மந்திரி எதிர்க்க வேண்டும். ஆனால் அவரோ எளிதில் ஹிந்தியைப் பயிலுவிக்கும் முறைகள் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறார். அச்சமும், தயக்கமும், அதிகார வேட்கையும் சூழ்ந்து குழப்பிவரும் ஆட்சி மொழிக் கொள்கையில் முதன் மந்திரி ராஜ்ய மக்கள் நலனைக் காத்துத் தருவார் என்று தோன்றவில்லை. மேலிடத்தில் மத்திய சர்க்கார் உத்தியோகங்களுக்கான பரீட்சைகளை ஹிந்தியில் நடத்தத் தீர்மானித்தால் அதை எப்படி ஆட்சேபிக்க முடியும் என்று கேட்டு, ஆதரவு தந்துவிடப் போவதாகவே அவர் சென்னை சட்டசபையில் கூறியிருக்கிறார்.

அண்டையிலுள்ள கர்நாடக ராஜ்யத்தின் கல்வி மந்திரி ஜெட்டி அவர்கள் அகில இந்தியப் பரீட்சைகளை ஹிந்தியில் நடத்தினால் அதனைக் கண்டிப்பாக எதிர்க்கப் போவதாகத் தெரிவித்திருக்க, நமது முதன் மந்திரிக்கு அவ்வளவு துணிவு இல்லாமற் போனது நமது துரதிர்ஷ்டம் !

போதனை மொழி விஷயத்திலும் நமது முதன் மந்திரி குழப்பத்துக்கு ஆட்பட்டிருக்கிறார்! கல்வி கற்கும்போது ஆங்கிலம், தாய் மொழி, ஹிந்தி என்ற மும்மொழிக் கொள்கையில் தத்தளித்து விட்டு, பள்ளிப் படிப்பு முடிந்தபின்பு ஹிந்திக்காரர்களுக்குச் சமமான வேலை வாய்ப்பில்லாமல் தமிழக இளைஞர்கள் தத்தளிக்க நேரிட்டால், இலவசக் கல்வியினால் நாம் முழுப் பலனைப் பெற்றதாகச் சொல்ல முடியுமா?

குஜராத் பெற்றோர் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ பி. டி. பட்வாரி தங்கள் ராஜ்ய சர்க்காரின் ஆங்கில விரோத உணர்ச்சியைக் கண்டித்து ஒரு பெரும் இயக்கமே நடத்த வேண்டும் என்று பெற்றோர்களுக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். அறிவுக்கு வேலி போடும் ஆட்சியாளர்களிடமிருந்து மாணவர்களை மீட்கப் போராட்டம் நடத்தியே தீர வேண்டும். நம் குழந்தைகள் இலவசப் படிப்புப் பெறுவது மட்டும் பயன் தராது. அதன்பின் வாழ்க்கைக்கு அது உதவவும் பெற்றோர்கள் வழி காண வேண்டும்.

# அடிப்படைக் காரணத்தை ஆராய வேண்டும்

பிரபல ஆங்கிலப் பத்திரிகைகள் யாவும் மத்திய சர்க்காரின் வரிவிதிப்புக் கொள்கையைக் கண்டித்து எழுதியுள்ளன. அவை கண்டனத்தோடு நில்லாமல் மூல காரணங்களை மேலும் ஆராய்ந்து பார்த்துத் தீர்வு சொல்ல வேண்டியது அவசியம்.

நேர்முக வரி, மறைமுக வரி, சர்க்காரின் கடன்கள் எல்லாமே வரம்பை மீறி விட்டன என்பதைப் பெரும்பாலான பத்திரிகைகள் ஒப்புக் கொண்டு, வரிகளைத் தளர்த்த வேண்டும் என்கின்றன. இவ்வாறு செய்தால் சர்க்கார் வருமானம் குறைந்துவிடும் என்பதையும் இப்பத்திரிகைகள் உணர்ந்திருக்கும். அப்படி வருமானம் குறையுமானால் சர்க்கார் தனது வரவையும் செலவையும் எப்படி ஈடுகட்ட முடியும் என்ற அடிப்படைப் பிரச்னையை இப்பத்திரிகைகள் ஆராய்ந்து பார்த்திருந்தால் இன்னும் சில நல்ல முடிவுகளுக்கு வந்திருக்க முடியும். சர்க்கார் செலவைக் கட்டுப்படுத்த வேண்டுமெனில் திட்டங்களைக் கைவிட்டேயாக வேண்டும் என்பதை இப்பத்திரிகைகள் நிச்சயமாக ஒப்புக் கொள்ள நேரிடும். அதாவது, சுதந்திரக் கட்சி கூறுவதுபோல் அசுர வேகத்தில் சக்திக்கு மீறித் திட்டங்கள் போட்டு நாட்டின் ஜீவ சாரத்தை உறிஞ்சாமல் சிறுகச் சிறுக முன்னேறினால் போதும் என்பதை உணர நேரிடும். காங்கிரஸ் சர்க்காரின் செலவினங்களைக் குறைக்க வழி சொல்லாமலே வரி விதிப்பை ஆட்சேபிப்பதில் சாரம் இல்லை. திட்ட மோகத்திலிருந்து பத்திரிகைகள் தைரியமாக மீள வேண்டும்.

'வரிகளைக் குறைக்கும் கொள்கை' என்பதாக ஒன்றைக் காலம் சென்ற கென்னடி கடைப் பிடித்தார். தற்போதைய அமெரிக்க ஜனாதிபதி ஜான்ஸனும் அதனையே பின்பற்றுகிறார். 'வரிகள் குறைந்தால்தான் தனியார்தொழில்கள் பெருகும். அப்போதுதான் பொதுமக்களின் வேலை வாய்ப்புக்கள் பெருகும்'

என்பதே அமெரிக்கர்கள் இந்த வரிக் குறைப்புக் கொள்கைக்குக் காட்டும் காரணம். ஆனால் நம் நாட்டிலோ வரியைக் குறைக்க வேண்டும் என்று வெறுமனே எழுதுகிறார்களேயன்றி, அந்தக் கோரிக்கையின் மூல காரணத்தை ஆராய்ந்து பார்த்து, வரிச்சுமை குறைந்தால்தான் வேலையின்மைப் பிரச்னை தீரும் என்று எடுத்துக்காட்ட யாருமில்லை.

'அதெல்லாமில்லை, சர்க்கார் போடுகிற வரிகளெல்லாம் பொதுமக்கள் நலனுக்குத்தானே செலவாகிறது?' என்று காங்கிரஸார் வாதிப்பார்கள். இப்போதே அப்படித்தான் கூச்சல் போட்டு வருகிறார்கள். இது உண்மைதானா என்று அடிப்படையிலிருந்து ஆராய்ந்து பார்க்க வேண்டும். அப்படிப் பார்த்தால் சர்க்கார் செலவு செய்கிற இனங்களில் மனித சக்தி மிகக் குறைவாகவே பயனாகிறது என்பதும் இயந்திரங்களுக்கும், பணம் கொழுத்த கண்டிராக்டர்களுக்குமே வரிப் பணத்தில் பெரும்பகுதி செலவாகிறது என்பதும் தெரியவரும்; தனி மனிதர்கள் தொழில் நடத்தும்போது பொதுமக்கள் வேலை வாய்ப்புப் பெறுவதுபோல் சர்க்கார் நிர்வாகத்தின் கீழ் பெற முடியாது என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாகத் தெரியும். அதோடு, மக்களின் வரிப் பணத்தைக் கொண்டு சர்க்கார் நடத்தும் தொழில்களில் ஏராளமாகப் பொருள் விரயமாகி நஷ்டத்திலேயே கொண்டு விடுகிறது என்பதும் தெரியும். இந்த நஷ்டத்தை ஈடுகட்டுவதற்காக விலையை உயர்த்தும்போது பாமர மக்களின் பணம் அவர்களறியாமலே அதன் மதிப்பில் இறங்கத் தொடங்கும். மக்களிடமுள்ள பணத்தின் மதிப்பை அவர்களறியாமலே குறைப்பது மறைமுகமான திருட்டுக்கு ஒப்பேயாகும்.

இத்தகைய உற்பாதங்கள் நேரிடக் கூடாது என்றால் டி. டி. கே.யின் பட்ஜெட்டை எதிர்த்தாக வேண்டுமென்பதை மக்களுக்கெல்லாம் பத்திரிகைகள் புரியவைக்க வேண்டும். வரிகளைக் கண்டித்து எழுதினால் மட்டும் போதாது. அடிப்படைக் காரணங்களையும் மக்களுக்குத் தெளிவுபடுத்த வேண்டும்.

# அபாயத்துக்குப் புனர்ஜன்மம்!

இவ்விதம் அச்சேறுகிற தருணத்தில் உணவுப் பொருள்களைப் பற்றிக் கட்டுப்பாடு, ரேஷன் முதலிய நடவடிக்கைகள் மீண்டும் மேற்கொள்ளப்படும் என்ற அபாய நிலை ஏற்பட்டிருக்கிறது. இனி மக்களுக்கு இப்போது கிடைத்து வரும் உணவுப் பொருள் கிடைப்பதே கஷ்டமாகும். கள்ளச் சந்தையில் அதிக விலை கொடுத்து வாங்கித் தங்கள் சம்பாத்தியத்தையெல்லாம் இழந்து ஏழை மக்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியதாகும். ராஜாஜி கட்டுப்பாட்டை எடுத்ததற்கு முன்பு நடந்த பழைய கதை மறுபடி நடக்கும். நினைத்தாலே நடுக்கமாயிருக்கிறது! இந்த நடுக்கத்திலிருந்தாவது மக்கள் அறிவு பெற்றால் உணவுக் கட்டுப்பாட்டுத் திட்டம் காங்கிரஸாட்சியின் சவப்பெட்டியில் முதல் ஆணியாகும்.

---

அண்மையில் மாயவரம் ஸ்ரீ சாமி அய்யங்கார் காலமான செய்தி கேட்டுத் திடுக்கிடாத நண்பர்கள் இடையாது. ஆளுங் கட்சியினரின் அரசியல் கோட்பாடுகள் காரணமாகச் சூதும் வாதும் பொறாமையும் பொய்யும் கட்டுக்கடங்காமல் பெருகும் ஒரு சூழ்நிலை ஏற்பட்டுவிட்ட இந்நாட்டில் அன்புக்கும் பண்புக்கும் உறைவிடமாக விளங்கிய ஸ்ரீ சாமி அய்யங்கார் சேற்றினிடை செந்தாமரை போல் திகழ்ந்தார். அந்த நாட்களில் தேச பக்தர்களுக்குப் பெருந்துணையாக நின்று உதவிய பிரமுகராகவும் பிரிட்டிஷ் அடக்குமுறைக்கு அஞ்சாத தீரராகவும் விளங்கினார். மாயவரத்திலுள்ள 'ஸ்ரீ ராகவம்' என்னும் அவர் இல்லம் அடையா நெடுங்கதவாகத் தேசபக்தர்களுக்கு விளங்கியது. காலஞ்சென்ற கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களிடமும் கல்கி பத்திரிகையினிடமும் தனியானதோர் அன்பு கொண்டிருந்தார். நல்ல கலாரசிகர். அவர் மறைவினால் வருந்தும் அவர் குடும்பத்தாருக்குக் கல்கி பத்திரிகையும் கல்கி நேயர்களும் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஸ்ரீ சாமி அய்யங்காரின் சாந்தம் துலங்கும் திருவுருவம் தமிழர்களின் இதயங்களில் நீங்காத நினைவாக என்றும் நிலைத்திருக்கும்.



1. பிள்ளையும், டாட்டாவும் தயாரித்து அளித்துள்ள தேயிலையைச் சபாநாயகர் திரு செல்லபாண்டியன் உட்லண்ட்ஸ் ஹோட்டலில் சென்னை முதன் மந்திரி தலைமையில் நடந்த வைபவத்தில் வெளியிட்டு வைத்தார். 2. பம்பாய் கர்னாடிக் மியூசிக் இன்ஸ்டிட்யூட்டின் பன்னிரண்டாவது ஆண்டு விழாவில் முதல் நாள் கச்சேரி செய்த செம்பை ஸ்ரீ





வைத்தியநாத பாகவதரைப் பாராட்டிக் கௌரவித்தனர். 3. சமீபத்தில் பத்மபூஷண் விருதைப் பெற்ற 'அமிர்த பஜார்' ஆசிரியர் திரு துஷார் காந்தி கோஷுக்குக் கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் பாராட்டு விழா நடத்தினர். 4. சிருங்கிரி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் சாரதா தேவி கோயிலில் நடத்திய பூஜையில் மைசூர் மகாராஜாவும் அவரது குடும்பத்தினரும் கலந்து கொண்டனர். 5. சென்னை கோகலே மண்டபத்தில் ஸ்ரீமதி ருக்மிணி தேவி அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா டாக்டர் சி. பி. அவர்களின் தலைமையில் விமரிசையாக நடந்தது. ராஜாஜியும் ஸ்ரீமதி ருக்மிணி தேவியும் விழாவுக்கு வருகிறார்கள்.







# பட்டினத்துப் பேச்சு



✽ சென்ற இதழ் பட்டினத்துப் பேச்சுப் பகுதியில் தங்கள் பெயர் பத்திரிகைகளில் அடிபட்டுத் தாங்கள் பிரபலமடையவேண்டும் என்பதற்காகவே சிலர் விசித்திரமான காரியங்களில் ஈடுபடுவார்கள் என்று எழுதப்பட்டிருந்தது. இப்போது பிரபல அமெரிக்க நடிகரான பிராங் ஸினட்ராவின் மகனைப் பற்றி வந்துள்ள செய்தி அத்தகையதாயிருக்கிறது.



ஸினட்ராவின் மகனைச் சிலர் கடத்திக் கொண்டு போய்விட்டார்கள். மகனைத் திரும்பப் பார்க்க விரும்பினால் பணம் கொடு என்று ஸினட்ராவுக்குச் செய்தி கிடைத்தது. 12 லட்சம் ரூபாய் கொடுத்து மகனை விடுவித்தார் ஸினட்ரா. ஆனால் அமெரிக்கத் துப்பறியும் நிபுணர்கள் (F. B. I.) குற்றவாளிகளைக் கண்டு பிடித்தும் விட்டார்கள். கேஸ் நடக்கிறது. குற்றம் சாட்டப்பட்ட மூவரில் ஒருவர் சார்பாகக் கோர்ட்டில் தோன்றிய நாற்பது வயதான மிஸஸ் ரூட் என்ற வக்கீல் 'பையனை யாரும் கடத்திக் கொண்டு போகவில்லை; இது பிரபலமடைவதற்காக அவன் கையாண்ட ஒரு விளம்பர தந்திரம்' என்கிறாள். 'ஜூனியர் ஸினட்ரா தன்னைக் கடத்திக் கொண்டு போகும்படி தானே முன்னேற்பாடுகளைச் செய்தான்' என்று வாதாடுகிறாள். மிஸஸ் ரூட்டின் வாதத்தைக் கோர்ட்டார் ஒப்புக் கொள்வார்களா என்பதைப் பொறுத்திருந்து தான் பார்க்க வேண்டும்.

✽ ஓட்டலுக்குப் போய்ச் சாப்பிடுவதை விட வீட்டிலேயே சமைத்தால் செலவு குறையும். இதேபோல அயல் நாடுகளிலிருந்து தருவிக்கும் பொருள்களை நாமே தயாரித்துக்கொண்டால் செலவு குறையும் என்றுதான் அனைவரும் நியாயமாக எதிர்பார்ப்பார்கள். ஆனால் திரு வி. சுப்ரமண்யம் அவர்களோ நம் நாட்டிலேயே மோட்டார் கார்களின் பகுதிகளை அதிகமாகத் தயாரித்து இறக்குமதியைக் குறைப்பதால் மோட்டார் கார்களின் விலை ஏறும் என்கிறார். இப்போது ஒரு மோட்டார் காருக்குத் தேவையான பகுதிகளில் சுமார் எண்பது முதல் எண்பத்தைந்து சத விகிதம் வரை உள்நாட்டில் தயாரிக்கப்படுகின்றன. இந்தச் சதவிகிதத்தை அதிகமாக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். இந்தியப் பகுதிகளின் சத விகிதம் அதிகமாக ஆக விலை அதிகரிப்பதோடு கூடவே தரமும் குறைந்து வருகிறது. எப்படித் தயாரித்தாலும் வாங்குவதற்கு ஆட்கள் கியூவில் நிற்கும் போது தரத்தைப் பற்றி உற்பத்தியாளருக்குக் கவலை ஏன்?

✽ சென்னை சட்டசபையில் வீரப்ப செட்டியார் கேட்ட ஒரு கேள்வியை யொட்டி 'கண்ட்சாரி' என்ற சொல்லுக்குப் பல வித அர்த்தங்களைப் பலர் அங்கத்தினர்கள் வெளியிட்டார்கள். கடைசியில் தொழில் மந்திரி வேங்கட்ராமன், கண்ட்சாரி என்ற ஹிந்திச் சொல்லுக்குச் சர்க்கரை என்று அர்த்தம்; சிறிய அளவில் தயாராகும் சர்க்கரையை 'கண்ட்சாரி' என்றும் பெரிய ஆலைகளில் தயாராகும் சர்க்கரையை 'ஷுகர்' என்றும் கூறுவது வழக்கத்தில் இருந்து வருகிறது என்று விளக்கி வைத்தார். பழுப்புச் சர்க்கரையைக் கண்ட்சாரி எனக் கருதக் கூடாதென்றும் தெளிவாக்கினர். பலவித சர்க்கரைகள் பற்றி விளக்கம் கூறும் வேலையைச் சர்க்கரை மன்றுடியார் மேற்கொள்ளாது, வேங்கட்ராமனுக்கு விட்டுக் கொடுத்தது பலருக்கு வியப்பை அளித்திருக்கும்.

✽ மயிலாப்பூர்ச் சாலையில் சென்று கொண்டிருந்த ஒரு கார் நடைபாதை மீது ஏறியதன் விளைவாகச் சேகர் என்ற பதினாறு வயதுச் சிறுவன் இறந்து போனான் — மைக்கேல் என்ற அறுபது வயதுக் காவல்காரன் வேப்பேரியில் ஒரு லாரி ஏறியதன் விளைவாக மாண்டு போனான் —

இது போன்ற செய்திகள் சராசரி ஒரு நாளைக்கு ஒன்று வீதம் வருகின்றன. பத்திரிகைகளில் வராத விபத்துக்கள் எத்தனையோ! இதில் மிகவும் துன்பமளிக்கும் விஷயம் என்னவென்றால் நூற்றுக்குத் தொண்ணூற்றென்பது சத விகிதம் விபத்துக்கள் தவிர்க்கப்பட்டிருக்கக்கூடியவைதான். முக்கியமாக ஸ்கூட்டர் ஓட்டிப் போகிறவர்களுடைய பொறுப்பு இரட்டிப்பு ஆகிறது. ஏனெனில் இதை ஓட்டிச் செல்பவரை விடப் பின்னால் அமர்ந்து செல்கிறவருக்கு ஆபத்து அதிகம் என்பதை இதுவரை நிகழ்ந்துள்ள விபத்துக்கள் நிரூபிக்கின்றன. ஆகவே,

**சாலைச் சட்டங்களைப் பயிலுங்கள். உங்கள் குழந்தைகளுக்கும் அதைக் கற்றுக் கொடுங்கள். சாவுகளைக் குறையுங்கள்.**

**உங்களுக்கு முன்னால் உங்கள் லைசென்ஸு காலாவதியாகிற மாதிரியே எப்போதும் வாகனத்தைச் செலுத்திப் போங்கள்.**

**நீங்கள் ஓட்டிச் செல்கிற வாகனம் மெதுவாகப் போகும்போது அது உங்கள் நண்பன். வேகமாகச் செல்லும்போது அதுவே எமன்—இதை மறவாதீர்கள்.**

✽ 'பார்' என்ற ஆங்கிலச் சொல்லுக்குத் தடை என்று பொருள். பம்பாயிலுள்ள பீரீச் காண்டி என்ற நீச்சல் குளத்தில் வெள்ளையரல்லாதார் குளிக்கக் கூடாது என்று கலர் பார்-நிறத்தடை இருந்ததை ஆட்சேபித்து ஓர் இயக்கமே நடந்து வெற்றி பெற்றது. முதன் முதலில் இந்த நீச்சல் குளத்தை அமைக்க வேண்டும் என்று யோசனை கூறிய ஆங்கிலேயரின் பெயர் மிஸ்டர் பார். அதனால்தான் இங்கே 'கலர் பார்' ஏற்பட்டதோ?






## அறுபத்து மூன்றாவது அத்தியாயம்

**பா**ரதி மறைத்திருந்தாலும் சத்திய மூர்த்தி மல்லிகைப் பந்தல் கல்லூரி வேலையை விட்டுவிட்டு மேற்கு ஜெர்மனிக்குச் செல்லப் போகிறார் என்று இப்போது மோகினிக்கே தெரிந்து விட்டது. பாரதி அந்த விவரத்தைத் தன்னிடம் மறைத்ததற்காக மோகினி சிறிதும் கவலைப்படவில்லை. வாழ்வில் எதற்காகவுமே கவலைப்பட்டுப் பயனில்லை என்பது போல் விரக்தியடைந்து விட்டபின் கவலைப்படுவது கூட அதற்குக் காரணமான துயரத்தின் கௌரவத்தைக் குறைத்து விடுகிறதே! 'எல்லாத் துயரங்களையும் — நம்மைத் தேடி வருகிற மலை மலையான எல்லாத் துன்பங்களையும்—நமக்கே சொந்தமாக ஏற்று அங்கீகரித்துக் கொண்டு நிமிர்ந்து நிற்கும் போதுதான் அந்தத் துயரத்துக்கு நாம் செய்கிற கௌரவம் மெய்யாகிறது' என்று அந்த நிலையில் எதையும் தாங்கிக் கொள்ள முடிந்த ஒரு நிதானமும் மனப்பக்குவமும் அவளுக்கு வந்திருந்தன. 'என்ன எழுதிக் கொண்டிருக்கிறீர்கள் அக்கா' என்று கேட்ட பாரதியிடம் தான் சொல்வது பொய்தான் என்ற உணர்வுடனே சிறிதும் மனம் குழம்பாமல், 'ஏதோ பழைய பாட்டு எழுதுகிறேன்' என்று பதில் சொல்லிச் சமாளித்த போதும், நள்ளிரவுக்கு மேலாகி விட்ட அந்த நேரத்தில் தனியாகஉட்கார்ந்து கொண்டு பேய் போல் எழுதிக் கொண்டிருந்த போதும் அதே நிதானத்தோடு தான் அவள் நடந்து கொண்டிருந்தாள். பார்க்கப் போனால் எது பேய்? எது மனிதன்? பேய்க்கும் மனிதனுக்கும் உயிருட் உணர்வும் தானே வேறுபாடுகள்! வாழ்க்கையிலேயே பேய் பிசாசுகளை விடக் கொடிய மனிதர்கள் தன்னைச் சூழ்ந்து பயமுறுத்திக்கொண் டிருக்கும் போது உருவமில்லாத வெறும் பேய் பிசாசுகள் இவர்களை விடக் கெட்டவைகளாக இருக்க முடியுமென்று அவளுக்குத் தோன்றவில்லை.

அப்போது அவளைச் சுற்றிலும் ஒரே இருள். நடுவே மேஜை விளக்கு மட்டும் ஒளி பரப்பிக் கொண்டிருந்தது. அந்த நிலையில் அவள், எதைச் செய்து கொண்டிருந்தாளோ அதுவே சொப்பனம்போல்

இருந்தது. வாழ்வதையும் நினைப்பதையும் விடச் சொப்பனம் எந்தவிதத்திலும் குறைந்ததில்லை. ஏனென்றால் எப்போதாவது வருகிற அந்தச் சொப்பனம் பிரத்தியட்ச வாழ்வின் துக்கங்களிலில்லாமல் சுகமாயிருக்கிறது. தோட்டத்துப் பக்கமிருந்து வீசிய குளிர்ந்த காற்றில் பன்னீர்ப் பூவின் மணமும், பவழ மல்லிகை




மணமும் கமகமத்தன. எங்கோ மரப் பொந்தில் ஆந்தை ஒரு முறை அலறியது. அப்போது சுவர்க் கடிகாரம் இரண்டுமணி அடித்தது. அந்த வேளையில் அவளுடைய மனத்தைப் போல் உலகமும் உணர்வு செத்துப் போய்த் தூங்கிக் கொண்டிருந்தது. தூக்கமும் ஒரு தற்காலிகமான சாவுதான்! ஆனால் அதிலிருந்து விழித்துக் கொள்ள முடிகிறது. சாவும் ஒரு நிரந்தரமான தூக்கம்தான்! ஆனால் அதிலிருந்து விழித்துக் கொள்ள முடிவதில்லை. தான் எழுதிய கடிதங்களைத் தனித் தனியே மடித்து இரண்டு உறைகளில் இட்டு மேஜை மேல் வைத்த பின் ஒரு நோக்கமும் இல்லாமல் வெளியே பலகணி வழியே பார்த்தான் மோகினி. எதிர்ப்புறம் நிலவும் மழை இருளும் கலந்து மயங்கிய மலையில் எங்கோ குங்குமமிட்டது போல் தீ எரிந்து கொண்டிருந்தது. பின்னிரவு குளிரக் குளிரப் பவழ மல்லிகைப் பூக்களின் வாசனை அறைக்குள் அதிகமாக வந்து பரவியது. காலந் தப்பி மிக முன்னாலேயே இந்தச் சோம்பேறி உலகத்தை எழுப்பிவிட ஆசைப்பட்ட அவசரக்காரச் சேவல் ஒன்று எங்கிருந்தோ ஒரு முறை கூவியது. வெறும் சொல்லுக்கும் நினைப்புக்கும் பொருள் எந்த இடத்தில் முடிகிறதோ அந்த இடத்திலிருந்துதான் உணர்ச்சி பிறக்கிறது. மோகினி அப்போது உணர்ச்சிமயமாயிருந்தாள். திடீரென்று அந்த அகாலத்தில் உடனே நீராடிவிட்டு வரவேண்டும் போலத் தோன்றியது அவளுக்கு. குளியலறைக்குள்போய்ச் சந்தனச் சோப்புப் பூசி உடல் குளிர நீராடி வேறு நல்ல புடைவை மாற்றித் திலகமிட்டுக் கொண்டாள் அவள். கண்களுக்கு ஆசையோடு மையும் தீட்டிக் கொண்டாள். அவள் அப்போது அந்த நள்ளிரவில் தனக்குத் தானே செய்து கொண்ட காரியங்களுக்கு ஏதோ ஓர் அர்த்தமிருக்கிறாற் போலவும் தோன்றியது. ஓர் அர்த்தமும் இல்லை போலவும் தோன்றியது. அவள் அப்போது தான் பரிபூரணமான சந்தோஷத்தோடு இருப்பதாகவும் உணர்ந்தாள். அப்படி உணர்ந்த மறுகணமே அதன் மறுபுறத்தில் பரிபூரணமான துக்கத்தையும் உணர்ந்து அநு

பனித்தாள். இருளில் தட்டுத் தடுமாறித் தோட்டத்துக்கு ஓடிப் போய் அரை குறையாக மலர்ந்திருந்த இரண்டொரு ரோஜாப் பூக்களையும், அடுக்கடுக்கான குடை மல்லிகைப் பூக்களையும் பறித்து ஈரக் கூந்தலை முடிந்து அதில் சொருகிக் கொண்டு வந்தாள். ஏதோ நினைத்தவளாக உள்ளே போய்த் தேடி எடுத்து அரங்கேறிய நாளிலிருந்து தன் பட்டுப் பாதங்களை அலங்கரித்த அந்தச்சலங்கைகளையும் பாரதி எழுந்து விடுவாளோ என்று பயத்தோடு காலில் ஓசைப் படாமல் அணிந்து கொண்டாள். இந்தப் பாழாய்ப்போன உலகத்துக்குப் புகழோடும், பெருமையோடும் தான் அறிமுகமாகக் கருவியாக இருந்த எல்லாவற்றையும் தன்னோடு சேர்த்து எடுத்துக் கொண்டு போய்விட வேண்டும் போல ஓர் ஆசை அப்போது அவளுள்ளே எழுந்து தவித்தது. மேஜை விளக்கருகே கையைக் கொண்டு போய்ப் பட்டுப் புடைவைத் தலைப்பினால் தன் விரலிலிருந்த மோதிரத்தைத் தேய்த்துப் பளபளக்கச் செய்தபின் அதன் பொன்னொளியில் தன் முகத்தைப் பார்த்த போது அந்த மோதிரத்தை அணிவித்த தெய்வத்தின் ஞாபகம் வந்து மனத்தைப் பிசைந்தது. அவளுடைய சலங்கையணிந்த பாதங்கள் உடனே எங்கோ புறப்பட்டுப் போய்விட வேண்டும் போல் துடி துடித்தன. மை தீட்டிய விழிகள் யாரையோ பார்க்கப் பறந்தன. சிவந்த உதடுகள் யாரிடமோ புன்முறுவல் பூக்க நெகிழ்ந்தன. கமலக் கைகள் யாரையோ வணங்க வேண்டும் போலக் குவிந்து கூப்புவதற்கு முந்தின. அன்று அப்போது அந்த விநாடியில் தான் மிகமிக அழகாயிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. சரீரமே மணக்கும் மல்லிகைப் பூ மாலையாக மாறிக் கனமில்லாமற் போய்விட்டது போலிருந்தது. ஒரு கையில் வீணையும் மற்றொரு கையில் ஏடுமாக வெள்ளைத் தாமரைப் பூவில் வெள்ளைத் திருவுடை தரித்துச் சரஸ்வதி தேவி போல் யாரோ தெய்வம் நெஞ்சில் பிரசன்னமாகி, 'இன்னும் தாமதமேன் குழந்தாய்! புறப்பட்டு வந்து விடு!' என்று அவசரமாகக் கூப்பிடுவதுபோல் ஒரு பிரமை உண்டாகி அந்தக் கணத்தில் அவளைப் புல்லரிக்க வைத்தது.

இந்த உலகை மறந்து கொஞ்சம் நிம்மதியாகத் தூங்க வேண்டும் போலவும் அவளுக்கு ஆசையாயிருந்தது. ஆனால் தூக்கமும் வரவில்லை. எங்கேயோ போக வேண்டும் போல் ஓர் அவசரத்தை உணர்ந்தாள். ஆனால் எங்கே போக வேண்டுமென்பதும் தெரியவில்லை. யாரையோ பார்க்க வேண்டும் போலப் பரபரப்பாகத் தவித்தாள். ஆனால் யாரைப் பார்க்க வேண்டு மென்றும் தெரியவில்லை. மீனாட்சியம்மன் கோவில் கோபுரம், பொற்றாமரைக் குளத்தருகே உள்ள கிளிக் கூண்டு மண்டபம், சங்கீத விநாயகர் கோவில் தெரு, தான் பிறந்து வளர்ந்து ஆளான வீடு, அந்த வீட்டுக் கூடத்தில் தான் தொழுவதற்கென்று ஒரு தெய்வத்தைத் தேர்ந்தெடுத்து மாலை சூட்டி மோதிரம் அணிவித்தது, நாட்டரசன் கோட்டையிலிருந்து கலியாணக் கச்சேரி முடிந்து திரும்பும்போது நிலா இரவில் சாலையோரம் குடிசையில் சந்தித்த 'சுகவாசத்துத்' தம்பதிகள் — எல்லாரும் தொடர்பாகவும், தொடர்பின்றியும், நனவுபோலவும் கனவு போலவும் மாறிமாறித் தோன்றினார்கள். கடிகாரம் மூன்று மணியடித்து ஓய்ந்தது. காற்றும் குளிரும் அதிகமாயின. வெளியே மழை வரும்போல மேகங்கள் கறுத்துக் கூடியிருந்தன. மறுபடியும் எங்கோ சேவல் கூவியது. பாரதி தூக்கத்தில் ஏதோ புலம்பித் தணிந்தாள். தோட்டத்து மல்லிகைப் புதரில் மங்கிய நட்சத்திரங்களைப் போல் பூக்கள் தெரியத் தொடங்கின. ஒவ்வொரு பூவாகக் கீழே உதிர்ந்து பவழ மல்லிகை மரத்தடியில் பாய்விரித்தாற்போல வெண்மை பரவித் தெரிந்தது. மேஜை விளக்கை அணைத்து விட்டுச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தாள் மோகினி. தூக்கம் வரவில்லை. உடல் சோர்வாகவும், இலேசாகவும் இருந்தது. இருட்டிலேயே எழுந்து போய் அலமாரியிலிருந்து ஏதோ எடுத்துக் கொண்டு — பின்பு தண்ணீர்க் கூஜாவைத் திறந்த ஓசையில் பாரதி விழித்துக் கொண்டு, 'யாரது?' என்று கேட்டாள். ''நான் தான் மோகினி. தண்ணீர்த் தாகம் நாக்கை வறட்டுகிறது'' என்று பதில் கூறி விட்டுத் தண்ணீரும் குடித்தபின் பழையபடி சாய்வுநாற்காலியில் போய் உட்கார்ந்தவாறே மீண்டும் தூங்க முயன்றாள் மோகினி. மறுபடியும் பேய்த் தாகம். மோகினி இரண்டாவது முறையாகவும் இருட்டில் தட்டுத் தடுமாறி நடந்து போய்த் தண்ணீர்க் கூஜாவைத் திறந்து அதிலிருந்த தண்ணீரையெல்லாம் பருகினாள். தீராத தாகம் மூண்டு விட்டது போல் அடி வயிற்றில் வெப்பம் எழுந்தது. உலகையே மறந்து நிம்மதியாக உறங்கிவிட வேண்டும் போல ஒரே சோர்வு. தள்ளாடித் தள்ளாடி நடந்து போய் மறுபடியும் சாய்வு நாற்காலியில் சாய்ந்து ஏதோ நினைப்புடன் பக்கத்து மேஜையில் இருந்த கடித உறைகளை எடுக்கக் கை நீட்டிய போது — அந்த உறைகள் கைக்கு எட்டாமல் மேஜை

# B·I



# S. S. ரஜுலா

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1964 ஏப்ரல் 3 | 1964 ஏப்ரல் 4 |

கம்பெனியின் சென்னைக் காரியாலயத்தின் மூலம் விற்பனை செய்யக்கூடிய பர்த் வசதியற்ற மற்றும் பங்க் வசதியுள்ள மேற்கண்ட கப்பல் பிரயாணத்துக்குரிய டிக்கட்டுகள் எல்லாம் விற்பனை ஆகிவிட்டன. இருந்தாலும் இவ்வகுப்பு டிக்கட்டுகள் கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸெஞ் புரோக்கர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

| C. M, குட்டி | AL. காசி செட்டியார் | கேரளா டிராவல்ஸ் |
|---|---|---|
| 38, அங்கப்ப நாயக்கன் தெரு<br>சென்னை - 1 | கந்தோஜிக் சென்டர் பில்டிங்<br>6, அரமனைக்காரத் தெரு<br>சென்னை - 1 | மாஸ்கட் ஹோட்டல்<br>திருவனந்தபுரம் |

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும் :

| பின்னி & கோ., லிட். | மதுரா கம்பெனி பிரைவேட் லிட். |
|---|---|
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை -1 | முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

குணத்தில் சிறந்தவை

## ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு



15 ந. பை.

பிளாஸ்டிக் பொட்டலங்கள்

ARUNA

விளிம்பில் கைக்கெட்டுகிற மாதிரி இருந்த மாத்திரைப் பாட்டில் கீழே விழுந்து உடைந்தது. நீட்டி எடுக்க முடியாமல் கைகள் அறவே சோர்ந்து கண்கள் இருண்டு வரவே நாற்காலியில் அப்படியே சாய்ந்து தூங்கினாள் அவள். மறுபடியும் ஒரு தெய்விகமான பிரமை! வீணையும் கையுமாகக் கலைமகளே நேரில் வந்து, 'இன்னும் தாமதமேன் குழந்தாய்! புறப்பட்டு வந்துவிடு!' என்று அவசரமாக அழைப்பது போல் ஒரு தெய்விகமான அழைப்பு அவள் காதில் கேட்டது. ஈரக் கூந்தலில் சொருகிய குடை மல்லிகை நன்றாக மணந்து அவள் நினைவில் இன்னும் பல்லாயிரம் மணங்களை நினைக்க வைத்தது. அந்த மணங்களின் நினைவில் மூழ்கி நித்தியமாகவும் சாசுவதமாகவும் அப்படியே விழியாமல் உறங்கிக் கொண்டிருக்க வேண்டுமென்று தோன்றியது மோகினிக்கு. அவள் உறங்கினாள். நிம்மதியாக இந்த உலகை மறந்து உறங்கினாள். இதன் சகலவிதமான ஆசாபாசங்களையும் நன்மை தீமைகளையும் சுகங்களையும் துக்கங்களையும் மறந்து உறங்கினாள். இந்த உலகில் பொழுது விடிந்து கொண்டிருந்தபோது அவள் தன்னைச் சுற்றி இருள் சூழ நன்றாக அநுபவித்து உறங்கிக் கொண்டிருந்தாள்.




* * *

அதிகாலையிலேயே எழுந்து நீராடி விட்டுச் சத்தியமூர்த்தியைப் போய்ப் பார்த்துப் பேசி வர எண்ணியிருந்த பாரதி கடிகாரத்தில் காலை ஐந்தே முக்கால் மணிக்கு அலாரம் வைத்திருந்தாள். அலாரம் மணி அடித்தது. அலாரம் அடித்ததைக் கேட்டதும் பாரதி வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருந்தாள். நேரங் கழித்து எழுந்திருந்து விட்டது போன்ற பரபரப்போடு அவள் மின் விளக்கைப் போட்டபோது, சுழித்துச் சுழித்து வீசும் குளிர்ந்த காற்று ஜன்னல் கதவுகளில் மோதியடித்துக் கொண்டிருந்தது. மழை வரும் போல் மலைகளிலும் சுற்றுப்புறத்திலும் இருண்டு மேகங்கள் கப்பியிருந்தன. விடிகிற நேரமாகியும் இருட்டு மூட்டம் போட்டிருந்தது. விளக்கைப் போட்டுத் திரும்பியவள் எதிரே பார்த்ததும் திகைத்தாள். மோகினி மேஜையருகே சோபாவில் உட்கார்ந்து சாய்ந்தபடியே தூங்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய தோற்றத்திலிருந்த பொலிவையும்—புதுமையையும் பார்த்தால் விடியு முன் அதிகாலையிலேயே எழுந்து நீராடி உடை மாற்றித் திலகமிட்டு அலங்கரித்துக்கொண்டு உட்கார்ந்தவள் தற்செயலாக அப்படியே சோர்ந்து தூங்கி விட்டாற்போலிருந்தது. ஜன்னல் வழியாக வீசிய மலைக் காற்றில் தோட்டத்து மரத்திலிருந்து உதிர்ந்த பவழ மல்லிகைப் பூக்கள் மோகினியின் மடியிலும் கால்களிலுமாகத் தாறுமாறாய் நிறைய வந்து விழுந்திருந்தன. காற்றுப் புகுந்து, அசைத்து ஆட்டிய கருங் கூந்தல் அலை அலையாகச் சுருண்டு சிலிர்த்துத் தூங்கிக் கொண்டிருக்கும் அவள் முகத்தை என்றுமில்லாத பேரழகோடு காண்பித்துக் கொண்டிருந்தது. பொன் நிறச் சரிகைக் கரையிட்ட வெண் பட்டுப் புடைவையணிந்திருந்ததனால் அவளே அப்போது கலைமகள் போலிருந்தாள். அந்த நடனராணி சும்மா தூங்குவதே ஒரு சாமர்த்தியமான அபிநயம் போலிருப்பதைப் பார்த்து வியந்து கொண்டே, 'பாவம்! இன்னும் கொஞ்ச நேரம் தூங்கட்டும். காப்பியோடு போய் எழுப்பலாம்....' என்று நினைத்துக் கொண்டவளாய்ப் பல் விளக்கப் போனாள் பாரதி. பதினைந்து நிமிஷங்களுக்குப் பின் கடச் கட ஆவி பறக்கும் காப்பியோடு பாரதி மோகினியை, எழுப்ப வந்தாள். ''என்னக்கா இது? விடிந்ததும் விடியாததுமாக எழுந்து குளித்து விட்டு இப்படி உட்கார்ந்தபடியே தூங்குகிறீர்களே....? காப்பி கொண்டு வந்திருக்கேன்......'' என்று பாரதி குரல் கொடுத்து விட்டுக் காப்பி டபராவை மேஜையில் வைத்தாள். மோகினிக்கு நல்ல தூக்கமாயிருக்க வேண்டும் என்று நினைத்து அவளைத் தொட்டு எழுப்புவதற்காகத் தோள் மேல் கை வைத்த பாரதி பூமாலை நழுவுவது போல் மோகினியின் தலை சாய்ந்து உடல் சரியவே அடித் தொண்டையிலிருந்து பீறிடும் அழுகை வீடே அதிரும்

பெரிய அலறலாக வெளிப்பட, ''அக்கா! மோசம் பண்ணிப்பிட்டுப் போயிட்டீங்களே'' என்று பெரிதாகக் கதறினாள். மோகினி உடுத்தியிருந்த புடைவையின் சரிகைக் கரை சற்றே விலகியிருந்த வலது பாதத்தில் அவள் சலங்கை கட்டியிருப்பது தெரிந்தது. காலடியில் தூக்க மருந்து மாத்திரைப் பாட்டில் விழுந்து உடைந்திருந்தது. மேஜை மேல் கடித உறைகள் இரண்டு கிடந்தன. ஒன்றில் பாரதியின் பெயர் இருந்தது. பாரதிக்குக் கடிதம் வைத்திருந்த உறையின் மேல், 'என் அருமைச் சகோதரி — தங்கை பாரதிக்கு' என்று முகவரி எழுதியிருந்தாள் மோகினி. சத்தியமூர்த்திக்கு எழுதியிருந்த கடித உறையில், 'என்னைக் காப்பாற்றி ஆட்கொண்ட தெய்வம் உயர்திரு. சத்தியமூர்த்தி அவர்களுக்கு' என்று எழுதியிருந்தாள். பாரதிக்கு எழுதிய கடிதத்தில், ''அருமைச் சகோதரீ! என்னை மன்னித்து விடு! ஏதோ ஒரு பிறவியில் நீயும் நானும் உடன் பிறந்தவர்களாக இருந்து விட்ட குறை தொட்ட குறையோ என்னவோ, நீ என் மேல் அளவற்ற அன்பும் பாசமும் காண்பித்தாய். என்னால் இனி உனக்கும் துன்பங்கள் வரலாம். நான் வாழ்வதற்கு விரும்பவில்லை என்பது உனக்கு ஆச்சரியமாக இருக்கலாம். நான் தூங்கப் போகிறேன். மனிதர்களின் இந்த உலகத்தை மறந்து நிம்மதியாகத் தூங்கப் போகிறேன். 'இன்றிரவு மட்டும் நிம்மதியாகத் தூங்குவதற்கு இரண்டு தூக்க மாத்திரைகளைச் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள்ளுங்களக்கா!' என்று நீ சொல்லியிருந்தாய் பாரதி! நானோ அடுத்த பிறவி வரை நிம்மதியாகத் தூங்க விரும்பும் பேராசையால் நிறைந்த பெருந் தூக்கத்துக்கு ஆசைப்பட்டுப் பாட்டிலிலிருந்த அவ்வளவு மாத்திரையையும் விழுங்கியிருக்கிறேன். மறுபடி இனி அடுத்த பிறவியில் விழித்தால் போதும். சொல்லப் போனால் இன்னொரு முறை இந்த உலகில் பிறந்து இதில் நிறைந்துள்ள துரோகங்களையும் வஞ்சகங்களையும் அநுபவிக்க வேண்டும் என்று நினைக்கும்போதே எனக்குச் சலிப்பாகத்தான் இருக்கிறது. முடிந்தால் நீ எனக்கு ஓர் உதவி செய். இதனோடு இருக்கும் மற்றொரு கடிதத்தை என் தெய்வத்திடம் சேர்த்துவிடு. தயவுசெய்து அவர் இந்த ஊரை விட்டுப் புறப்படுவதற்கு முன் இதை அவரிடம் கொடுத்து விடு. என்னுடைய தற்கொலைக்கு அவர் என்னைச் சந்தேகப்பட்டு வெறுத்தது மட்டும் நான் காரணம் என்று நீயாக எண்ணி அவரை ஒன்றும் கோபித்துக் கொள்ளாதே! நாங்கள் மேளதாளத்தோடு சந்தனம் வெற்றிலை பாக்குக் கொடுத்து ஊரறிய மணந்து கொள்ளவில்லையானாலும் ஒருவரையொருவர் புரிந்து கொண்டோம். அவருடைய மனைவியாகத்தான் நான் இப்போதும் சாகிறேன். 'அவருடைய மனைவி' என்ற பரிசுத்தத்துக்கு எந்தக் களங்கமும் ஏற்படுவதற்கு முன் நான் இந்த உலகிலிருந்து போய்விடுவது நல்லது. இந்தத் தேசத்துப் பெண்கள் இறக்கும் போது சுமங்கலியாக இறக்க வேண்டுமென்று தவமிருப்பார்கள். நானோ பிடிவாதமாக அவருடைய சுமங்கலியாக இறக்க வேண்டுமென்று ஆசைப்பட்டு அதற்காகவே மகிழ்ச்சியோடு இறக்கிறேன். சாவதில் கூட மகிழ்ச்சி உண்டா என்று நீ கேட்கலாம்! வாழ்வதனால் அதை அடைய முடியாத போது சாகாமல் வேறென்ன செய்ய முடியும்? முன்பு ஒரு சமயம் அவரிடம் நான் ஒரு வேண்டுகோள் விடுத்திருந்தேன். ''நான் இறந்து போனால் என்னுடைய சிதையில் உங்கள் கையால் ஒரு முழம் பூவும் மஞ்சளும் குங்குமமும் போடுங்கள். அடுத்த பிறவியிலும் உங்களையே காதலித்து மணப்பதற்காக இந்தச் சௌபாக்கியத்தை எனக்கு அளியுங்கள்! என்னுடைய சடலம் மஞ்சள் குங்குமம் அழியாமல் பூவுடனும் பொலிவுடனும் கொழுந்து விட்டு எரிகிற போது நீங்கள் நிஜமான கருணையோடு அருகில் வந்து எனக்காக அழுதால் — உங்களுடைய கண்களிலிருந்து இரண்டு சொட்டு நீர் நெகிழ்ந்து என் சிதையில் விழுந்தால் அந்தக் கடைசி விநாடிக் கருணையையே வாயிலாகக் கொண்டு ஞாபகமாகவும், பிடிவாதமாகவும், நான் அடுத்த பிறவியில்கூட உங்களையே நிச்சயமாகத் தேடிக் கொண்டு வந்து விடுவேன்'' என்று முன்பு நான் அவரிடம் வேண்டிய போது அந்த அமங்கலமான வேண்டுகோளுக்காக அவர் என்னைக் கண்டித்துக் கடிந்து கொண்டார். கோபித்தார். இன்றுள்ள மன நிலையில் அவர் என்னுடைய இந்த வேண்டுகோளை நிறைவேற்றுவாரா இல்லையா என்று எனக்கே தெரியாது! இதனுடனிருக்கும் கடிதத்தில் இதைப்பற்றி அவருக்கு நினைவூட்டி எல்லா விவரமும் எழுதியிருக்கிறேன். நீ அவரிடம் இந்தக் கடிதத்தைக் கொண்டு போய்க் கொடுத்து விடு! அப்புறம் அவர் செய்வதைச் செய்யட்டும். மறுபடி விழித்துக் கொள்ள முடியாத பேருறக்கத்தில் ஆழ்

---

**இந்த இதழில் முற்றுப் பெறுகிற பொன்விலங்கு தொடர்கதையின் உச்சகட்டத்தில் உருக்கம் நிறைந்த காட்சி ஒன்றை அட்டைச் சித்திரமாக வரைந்துள்ளார் ஓவியர் விஜயா.**

உங்கள்
அலுவல்களை
அஜீரணம்
பாதிக்கிறதா?

# ஹ்யூலெட்ஸ் மிக்சர்

## அஜீரணத்தை விரைவில் அகற்றுகிறது




கட்டிப்போட்டாற்போல், ஒரே இடத்தில் அமர்ந்தவாறே உங்கள் அலுவல்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில் உங்கள் வேலை அப்படியானது. இக்காரணத்தினால் உங்களைப் போன்றவர்கள் அடிக்கடி அஜீரணத்தினால் அவஸ்தைப்பட நேரிடுகிறது. ஆனால் நீங்கள் அவ்வாறு கஷ்டப்படத் தேவையில்லை. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபாதையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக்கிறது; வயிறுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பளிக்கிறது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட உத்தமமானது. வயிற்றுப் போக்குக்கு அபினி சேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.

**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது**

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86/A, ஆதியப்ப நாயக் தெரு, மதறாஸ்-3

JWT/CJH-

மாலை நேரத்தில்
ரமேஷுக்கு வேண்டியவை
பிஸ்கட்டுகள், பழம்,
ஒரு பன் ரொட்டி,
சூடான தேநீர், தவிர

## க்ளுகோவிடா



### சர்க்கரைக்குப் பதில்

## க்ளுகோவிடா ஏன்?



விஷயமறிந்தவள் ரமேஷின் அன்னை. க்ளுகோவிடா இனிப்பூட்டுவதன்றி உடனடி சக்தி தரும் உணவுமாகும் என அவள் அறிவாள். வைடமின் டியும், கால்ஷியமும் செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர்தான் க்ளுகோவிடா. ரமேஷுக்குத் தேவையான சக்தியை அது தருகிறது – அதி விரைவாக! தேநீரோ, காப்பியோ, சூடான பானமோ, குளிர்ந்த பானமோ, எதுவாயினும் க்ளுகோவிடா அதற்கு இனிப்பூட்டுவதுடன் எலும்புகள், நரம்புகள் உடல் திசுக்கள் ஆகியவற்றுக்கு வலுவூட்டவும் செய்கிறது.

# க்ளுகோவிடா

**இனிப்புக்கும் உடனடிச் சக்திக்கும்!**



**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரைவேட் லிட்.**

'ப்ராஸெஸ்ட்' உணவுப் பொருள்களுக்கு பாரதத்தில் தலைமைவகிப்பவர்கள்

BI-CP-37 TAM

வதற்காக இப்போது எனக்கு இந்த உலகத்திலிருந்து விடை கொடு.''

—உன் அக்கா மோகினி.

பாரதி இந்தக் கடிதத்தைப் படித்து விட்டுக் குழந்தைபோல் மேலும் மேலும் விசும்பி விசும்பி அழுதாள். அவள் சற்று முன் பெரிதாக அலறியழுத குரலைக் கேட்டு ஜமீன்தாரும், கண்ணாயிரமும், முன்புறம் போர்டிகோவில் காரைத் துடைத்துக் கொண்டிருந்த டிரைவர் முத்தையாவும் பதறிப் போய்ப் பரபரப் படைந்து ஓடி வந்தார்கள். மோகினி சத்தியமூர்த்திக்காக எழுதிவைத்திருந்த கடிதத்தை ஜமீன்தாரும் கண்ணாயிரமும் பார்த்து விடாமல் பத்திரமாக எடுத்து மறைத்து வைத்துக் கொண்டாள் பாரதி. எவ்வளவு பெரிய சோகத்தின் போதும் ஜமீன்தாருக்கு அழுகை வராது. அவ்வளவு குரூரமும், கல் மனமும் அவருக்கு உண்டு. மைனர்ப் பருவத்தில் ஜமீன் எல்லைக்குள்ளிருந்த எத்தனையோ ஏழை எளிய பெண்களிடம் தவறாக நடந்து கொண்டு — அவர்கள் வெளியில் போய்த் தன்னைக் குறைத்துப் பேசுமளவுக்குத் தைரியம் வந்ததாகத் தெரிந்தால் ஆட்களை விட்டுக் குருத்து வயதிலேயே கொலை செய்யவும் ஏற்பாடு செய்து பழக்கமிருந்ததாகப் பேசிக் கொள்வார்கள் அவரைப் பற்றி. கண்ணாயிரமும் பெரிய கிராதகன். மோகினியைக் கருவியாக வைத்து இந்த ஜமீன்தாரிடம் இன்னும் உறவாடிப் பணம் பண்ணலாமென்ற திட்டத்தில் மண் போட்டு விட்டு அவள் போய் விட்டாளே என்பது தான் அவனுக்கு இப்போது வருத்தமாக இருந்ததே ஒழியப் பச்சைக் கிளி போல் பரிசுத்தவதியான அந்த அழகி மாண்டு போய் விட்ட துயரம் அவனுக்கும் நிஜமாக இல்லை. கொடிய மிருகங்களைப் பார்ப்பது போல் அவர்களைக் கடுமையாகப் பார்த்தாள் பாரதி. டிரைவர் முத்தையாவும், சமையல்காரரும், வீடு பெருக்கும் வேலைக்காரி ஒருத்தியும் கண் கலங்கி நின்றார்கள். வாழ்வின் தொடக்கத்திலிருந்தே குரூரமாகவும் கொடுமையாகவும் வாழ்ந்து வாழ்ந்து மென்மையான உணர்வுகளெல்லாம் மரத்துப் போய் விட்ட ஜமீன்தாரும், கண்ணாயிரமும் பேயறை பட்டதுபோல் திகைத்து நின்றார்களே ஒழியக் கண்ணீர் விட்டு அழவில்லை. எல்லாரையும் ஒதுங்கிப் போகச் சொல்லி விட்டு வேலைக்காரியுடைய உதவியோடு மோகினியின் உடலைத் தரையில் எடுத்து விட்டாள் பாரதி. வெளியே காற்றும் மழையுமாகப் பலமான சாரல் பிடித்திருந்தது. பிணத்தின் தலைமாட்டில் விளக்கேற்றி ஊதுவத்தி கொளுத்தி வைத்து விட்டுச் சுகமாக அநுபவித்துத் தூங்குவது போல் அழகாயிருந்த மோகினியின் தோற்றத்தைப் பார்த்து மறுபடியும் குமுறிக் குமுறி அழுதாள் பாரதி. இறுதியில் ஒருவாறு தன் மனத்தைத் தேற்றிக் கொண்டு மோகினியின் கடைசி விருப்பப்படி அந்தக் கடிதத்தைச் சத்தியமூர்த்தியிடம் கொடுப்பதற்காக அவள் புறப்பட்டாள்! ஆனால் என்ன துரதிருஷ்டம்? சாவுக்குப் பிறகும் மோகினியின் துரதிருஷ்டம் அவளுடைய கடிதத்துக்குக் கூட இருந்தது. எதிர்பாராத விதமாகக் காலையில் முதல் பஸ்ஸுக்கே புறப்பட்டு மதுரைக்குப் போயிருந்தான் சத்தியமூர்த்தி. சாவுக்குப் பின்பும் அவளைத் துர்ப்பாக்கியசாலியாக்கி அவளுடைய வேண்டுகோள் நிறைவேறாமல் போய் விடுமோ என்ற நிலையை ஏற்படுத்தாமல் கடி




சென்னை அசெம்பிளியில் கருணாநிதியின் பேச்சைக் கேட்டபிறகு, ''நகர சபைத் தேர்தல் சமயத்தில் சின்ன சாமியை விளம்பரப் படுத்தித் தி.மு.க.வினர் அவரைப் பெரிய ஆசாமியாக்கி விட்டார்களே'' என்றும், ''பெரிய சாமியாகிய என்னைக் காங்கிரஸார் சின்னத்தனமாகப் பயன்படுத்திச் சின்னசாமியாக்கி விட்டார்களே'' என்றும் திருப்பதி வெங்கடாசலபதி குறைப்பட்டுக் கொள்கிறார்.

ஃ ஃ ஃ

ஜப்பான் பாணியைப் பின்பற்றி, நியாயமான முறையில் சர்க்காருக்கு வரிகளைச் செலுத்திவிட வேண்டும் என்கிற கடமையுணர்ச்சியைச் சிறுவர்களுக்குப் பள்ளிக்கூடங்களில் கல்வி போதிக்கையிலேயே ஊட்ட அரசாங்கம் முடிவு செய்து, அதற்காகும் அதிகப்படி செலவை ஈடுகட்டும் வகையில் கல்வி வரியை அதிகரிக்க நகரசபைக்கு அநுமதியளித்திருக்கிறது.

ஃ ஃ ஃ

சென்னையில் நடந்த கிழக்கு—மேற்கு சங்கீத மகாநாடு, 'புத்திசாலித்தனமாகவும் விஷயமறிந்தும் சங்கீதத்தை அநுபவிக்குமாறு ரசிகப் பெருமக்களைத் தூண்டுவது எப்படி?' என்பது குறித்து விவாதம் நடத்தியது. இதற்கு ரேடியோ சிலோனில் விளம்பரம் செய்வதே சிறந்த யோசனை என்று இறுதியில் முடிவாயிற்று.

தத்தை டிரைவர் முத்தையாவிடம் கொடுத்து உடனே காரிலேயே மதுரைக்குப் போய்ச் சத்தியமூர்த்தியை அழைத்து வர ஏற்பாடு செய்தாள் பாரதி. கார் மதுரைக்குப் போய்த் திரும்பும் வரை அவளால் அங்கு நடைபெற்ற ஏற்பாடுகள் எதையும் தடுக்க முடியவில்லை. சத்தியமூர்த்தி வருகிற வரை மோகினியின் பிணத்தை எடுக்கலாகாதென்றுகூட அவளால் வெளிப்படையாக அவர்களைத் தடுக்க முடியவில்லை.

மாலை ஆறு மணிக்கெல்லாம் பூச்சரங்களால் அலங்கரித்த பல்லக்கில் மோகினியின் பிரேதத்தை வைத்து எடுத்துக் கொண்டு மயானத்துக்குப் புறப்பட்டு விட்டார்கள். ஊர் மெச்ச வேண்டும் என்பதற்காக ஜமீன்தார் இரண்டாயிரம் ரூபாய்க்கு முழு ஒரு ரூபாய் நாணயங்களாக மாற்றி வீட்டிலிருந்து மயானம் வரை வீதியின் இரு புறமும் காசுகளை வீசி எறியச் செய்தார். மழை தூறிக் கொண்டிருந்ததனால் மயானத்தில் மேற்புறம் தகரக் கூரையிட்ட ஓரிடத்தில் சிதை அடுக்கப்பட்டது. தம்முடைய பேர் கௌரவம் இதையெல்லாம் காப்பாற்றிக் கொள்வதற்காக அது தற்கொலை என்று தெரியாதபடி வெறும் இயல்பான மரணம் என்பது போல் மட்டுமே பத்திரிகைகளில் செய்தி வர மிகவும் கவனமாக ஏற்பாடு செய்திருந்தார் ஜமீன்தார்.

மயானத்தில் காரியங்கள் எல்லாம் முடிந்து வீடு திரும்பிய போதும் மதுரையிலிருந்து கார் திரும்பவில்லை என்று தெரிந்து சத்தியமூர்த்தியின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தாள் பாரதி. மோகினியைக் கொண்டுபோய்ப் பொசுக்கி விட்டு வீடு திரும்பியபின் வீட்டுக்குள் நுழைவதற்கே சலிப்பாகவும், வெறுப்பாகவும் இருந்தது அவளுக்கு. ஜமீன்தாரும், கண்ணாயிரமும் அவர்களோடு வழக்கமாகச் சீட்டு விளையாட வரும் இன்னொரு பெரிய மனிதரும், கவலையில்லாமல் முன் ஹாலில் உட்கார்ந்து சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். இரவு மணி ஒன்பதரைக்கு மேல் முன்புறம் போர்டிகோவில் கார் ஹாரன் ஒலிகேட்டு உள்ளே அழுது கொண்டிருந்த பாரதி வெளியே வந்து பார்த்தாள். டிரைவர் முத்தையா மட்டும் காரிலிருந்து இறங்கி வந்தான்.

''அவர் வரலையா, முத்தையா?''

''வந்திருக்காரு! ஆனா இங்கே நம்ம வீட்டுக்கு வரச் சங்கடப்படறாரு. அப்படியே வார வழியிலே மயானத்துப் பக்கமாகக் காரை நிறுத்தச் சொல்லி இறங்கிக்கிட்டு 'நீ வீட்டுக்குப்போ'ன்னு சொல்லிக் காரையும் என்னையும் இங்கே அனுப்பிச்சிட்டாரு'' என்றான் முத்தையா.

''வேறு என்ன சொன்னார்?''

''நீங்க முதல்லே மதுரைக்கு அனுப்பிச்ச கடிதாசு அவருக்குக் கிடைக்கலியாம். அதனாலேதான் இவ்வளவும் ஆகிவிட்டதுன்னு ரொம்ப வருத்தப்பட்டார். காரிலேயே அழுதுக்கிட்டுத்தான் வந்தாரு. இப்பக் கொடுத்தனுப்பின கடிதாசையும் அழுதுக்கிட்டேதான் படிச்சாரு. இத்தினி நாளா நம்ம காலேஜிலே இருந்தாரே? 'ஸ்டிரைக்' வந்தப்போ ஹாஸ்டலுக்குத் தீ வச்சப்பிட்டாருன்னு பொய்யாப் பழி சுமத்தி அவரைப் போலீஸ் டேசனுக்கு இழுத்துட்டுப் போனாங்களே; அப்பக் கூட அவர் கண் கலங்கி நான் பார்க்கலீங்கம்மா. அத்தினி நெஞ்சழுத்தக்காரரு இன்னிக்குத்தான் பச்சைப் புள்ளே கணக்காக் குமுறிக் குமுறி அழுதாரு. சமாசாரத்தை அறிஞ்சிக்கிட்டதும் ரொம்ப மனசு உடைஞ்சி போயிட்டாரு.....'' என்று டிரைவர் கூறியபோது, 'சத்தியமூர்த்தி மயானத்திலிருந்து இந்த மழைச் சாரலில் எப்படி ஊருக்குள் திரும்பி வருவார்? அவசரப்பட்டு வண்டியைத் திருப்பி அனுப்பி விட்டாரே?' என்ற சந்தேகம் வரவே தானே அந்தக் காரை ஓட்டிக் கொண்டு திரும்பவும் மயானத்துக்குப் புறப்பட்டாள் அவள்.

* * *

எல்லையற்ற கருமையாய் மேகங்கள் அடர்ந்து எங்கும் கனத்துக் கிடந்த மையிருட்டினிடையே அவளுடைய பிணம் எரிகின்ற அந்தச் சிதையைத் தேடிச் சென்று மதுரையிலிருந்தே வாங்கி வந்திருந்த மல்லிகைப் பூமாலையையும், மஞ்சள் கிழங்கையும், குங்குமத்தையும் அந்த நெருப்பில் இட்டபின் மௌனமாகக் கண்ணீர் சிந்தியபடியே நின்றான் சத்தியமூர்த்தி. அந்தச் சிதையிலிருந்து பிதிர்ந்த நெருப்புத் துண்டுகள் இரண்டு அவனுடைய கால்களை முத்தமிடுவதுபோல் வந்து வீழ்ந்து அங்கே கட்டன. தன்னைப் பொறுத்தவரை உலகத்தின் சந்தோஷமயமான விநாடிகள் — சந்தர்ப்பங்கள் எல்லாம் அன்று அங்கே முடிந்து போய் விட்டதாகத் தோன்றியது அவனுக்கு. பார்க்கப்போனால் வாழ்க்கையே ஒரு சபலம்தான். சிலருக்கு அது நிறைவேறுகிறது. பலருக்கு நிறைவேறுவதில்லை. அது நிறைவேறுவதில்லை என்று உணரும்போது மனப்பக்குவமில்லாதவர்களுக்கு உலகின் மேலேயே கோபமும் வெறுப்பும், நிராசையும் வருகின்றன. சத்தியமூர்த்தி மனப்பக்குவமில்லாதவனில்லை. வாழ்க்கையில் அவன் நிறையத் துக்கப்பட்டுவிட்டான். ஆனால் மற்றவர்களுடைய சந்தோஷத்துக்காக இன்னும்

# வாரம் ஒரு முறைதான் இவள் கடைக்குச் செல்கிறாள் சாமான் வாங்க. காரணம், இவள் வீட்டிலுள்ள விசாலமான

## ஆல்வின் பிரஸ்ட்கோல்ட் தான்

நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்டுள்ள உட்புறத்தைக் கொண்டதும், நிறைய சாமான்களைக் கொள்ளும் இடத்தை உடையதுமான ரெப்ரிஜிரேடர் இது. ஒரு வாரத்திற்குத் தேவைப்படும் காய்கறிகளையும் மற்ற சாமான்களையும் ஆல்வின் பிரஸ்டகோல்டினுள் விசயமாக வைத்துக்கொள்ளலாம். இத்துடன் மிதமான சாப்பாட்டுப் பொருள்களை வைத்துக்கொள்ளவும் இடம் நிறைய இருக்கிறது இதனுள்.

**விலை ரூ. 1,500 ( எக்ஸைஸ் டூட்டி மற்றும் வரிகள் தனி. )**

உணவுப் பொருள்கள் வைக்கும் இடத்தின் அளவு 7.5 கிலோ கிராம் - உறையும் பனிக்கட்டியின் அளவு 1.36 கிலோ கிராம் - 2 அலுமினியம் ஐஸ் க்யூப் தட்டுகள் - பெரிய குளிர்ச்சித் தட்டு (சில் ட்ரே) - 3 விசாலமான அலுமினிய அறைகள் - கண்ணாடி மூடியுடன் கூடிய கிரிஸ்பேடர் - 8 முட்டைகள் வைத்துக்கொள்ளும் அறை - வெண்ணெய் வைக்க ஒரு அறை - கதவு உள்ள அறைகள் 2 - தானாகவே எரியும் விளக்கு.

**ஹைதராபாத் ஆல்வின் மெடல் ஒர்க்ஸ்** ஸனத்நகர், ஹைதராபாத்



பலவித ஆல்வின் ரெப்ரிஜிரேடர் மாடல்களைக் கீழ்க்கண்ட இடங்களில் பார்வையிட உங்கள் வருகையை எதிர்நோக்குகிறோம்.

பம்பாய் ஆபீஸ் : ஆக்ரா ரோடு, பாண்டுப், பம்பாய் -78

ஷோரூம்கள் :

15/1, ஆஸப் அலி ரோடு, புது டில்லி
பெங்கால் ஸ்டோர்ஸ், 8-A, சௌரங்கி பிளேஸ், கல்கத்தா
150 - A, லிப்ராஜ் மான்ஷன், மவுண்டு ரோடு, சென்னை
216, கன்பவுண்ட்ரி, ஹைதராபாத்

அவன் எத்தனையோ பெரும் பணிகளைப் புரிந்து நெடுநாள் வாழவேண்டும்.

மயானத்தில் அந்த வேளையில் பின்னால் யாரோ வந்து நிற்கிற காலடியோசை கேட்டு அவன் திரும்பினான். பாரதி வந்து நின்று கொண்டிருந்தாள். மெல்ல விசும்பி அழுது கொண்டே, ''அக்கா தெய்வப் பிறவி! உங்களுக்குச் செய்து கொடுத்த சத்தியத்தைக் கடைசி வரை காப்பாற்றி விட்டாள். இன்னொருவருடைய கை படுவதற்கு முன் தானாகவே மண்ணில் உதிர்ந்து தன் தூய்மையைக் காப்பாற்றிக் கொண்டு விடுகிற பவழ மல்லிகைப் பூவைப் போல் உதிர்ந்து போய் விட்டாள்! நீங்கள் அந்தப் படத்தைப் பார்த்துச் சந்தேகப்படுகிறீர்கள் என்பதைப் பொறுத்துக் கொள்ளாமல் அக்கா புழுவாய்த் துடித்துப் போனாள். உலகமே கசந்து போய் மறுபடி விழித்து எழுந்திருக்க விரும்பாத பெருந் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டாள். இனி வருந்தி என்ன பயன்? நீங்கள் ஆண் பிள்ளை! எங்கோ வெளி நாட்டுக்குப் போகிறீர்கள். புதிய புதிய அநுபவங்கள் ஏற்பட்டு உங்களுடைய ஞாபகத்திலிருந்து மோகினி அக்காவைப் பற்றிய நினைவே மங்கினாலும் மங்கி விடும்.....'' என்றாள்.

''தயவுசெய்து அப்படிச் சொல்லக் கூடாது! அவளை நான் வாழ்வில் என்றுமே மறக்க முடியாது பாரதி! நான் மறக்க முடியாதபடி என் கையில் ஒரு பொன் விலங்கு போட்டுப் பிணித்து விட்டுப் போயிருக்கிறாள் அவள். இனி என்னுடைய இந்த வலது கையில் மானசீகமாய்இன்னொருகையும் நிரந்தரமாகப் பிணைந்திருக்கிறது. எனக்கு ஏற்கெனவே மணமாகி அந்த மணத்துக்கு நாயகியை இன்று நான் பறிகொடுத்து விட்டேன் என்ற ஞாபகம் கையிலிருந்து பிரித்தெடுக்க முடியாத இந்த மோதிரம் உள்ள வரை மாறாது. இந்தக் கைக்கு இனி இந்த மோதிரம் ஒரு தடை. ஏனென்றால் மோகினி வாழ முடியாமல் போன வாழ்க்கையை வாழ்வதற்காக எந்தப் பெண்ணும் இனி மேல் இந்தக் கையைப் பற்ற முடியாமல் இந்த மோதிரம் தடுத்துக் கொண்டேயிருக்கும். என் வாழ்வில் இனி இது ஒரு தவம். நான் டில்லிக்குப் போய்த் திரும்பு முன் மோகினியிடமிருந்து நீங்கள் வாங்கி அனுப்பிய கடிதம் மதுரைக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால் என் தந்தை அதை வாங்கிக் கோபத்தோடு அடுப்பில் கிழித்தெறிந்திரா விட்டால் மோகினி ஜமீன்தாரை இரகசியமாக மணந்து கொண்டு விட்டாளென்று சந்தேகப்பட்டு அவளை நான் வெறுக்க நேர்ந்திருக்காது'' என்று கண் கலங்கிப் போய் அழுகை தொனிக்கும் குரலில் பாரதிக்குப் பதில் கூறினான் சத்தியமூர்த்தி. பாரதியும் கண் கலங்கினாள். பேசிக் கொண்டே மயானத்துக் கிளைச் சாலையிலிருந்து மெயின் ரோட்டுக்கு வந்தார்கள் அவர்கள். ''வீட்டுக்கு வாருங்கள். காலையில் மதுரைக்குப் போகலாம். டிரைவர் முத்தையாவைக்

## சில சரக்கு



✽ கோவாவில் கிராமங்களில் உள்ள பெரியவர்கள் எந்த வீட்டு மாப்பிள்ளையையும், 'நம்ப வீட்டு மாப்பிள்ளை' என்று கூறுவது வழக்கம். அதே போன்று வாலிபர்களும், ஸ்திரீகளும், 'நம்ப மச்சான்' என்று அழைப்பார்களாம்.

✽ அமெரிக்காவில் பென்ஸில்வேனியாவில் குடியேறியுள்ள டச்சுப் பரம்பரையினர் நன்றாகச் சமைத்து, நன்றாகச் சாப்பிட்டு உணவை அனுபவிப்பவர்கள். அவர்கள் உணவுக்கு மரியாதை கொடுப்பார்களாம். ரொட்டியைக் கருக்கி விடுவதோ, அல்லது உப்பையோ உறைப்பையோ அதிகமாகவோ குறைவாகவோ போடுவதைப் பாபகரமான காரியம் என்று கருதுகிறார்களாம்.

பெரியவர்கள் உணவுப் பண்டத்தை வீணாக்குவதே இல்லை. சிறுவர்கள் கீழே ஒரு ரொட்டித் துண்டு, ஒரு சொட்டுப் பால் விழாமல் சாப்பிடுவார்கள். அப்படி உணவு கீழே விழுந்து வீணானால் தேவலோகத்தில் தேவதைகள் கண்ணீர் விட்டு அழுவார்கள் என்று நம்புகிறார்களாம்.



✽ ஜெர்மனியில் முன்னெல்லாம் தந்தைதான் சிறுவர்களைக் கவனித்துக் கொள்வது வழக்கம். இப்போது முக்கால்வாசிக் குடும்பங்களில், தாயாருக்குத்தான் அந்தப் பொறுப்பு. தாய்மார்கள் பலர், 'முக்கியமாகப் பையன்களை அடித்துத் தான் வளர்க்க வேண்டும்' என்று நினைப்பவர்கள். நாலு வீடுகளுக்கு ஒரு வீட்டிலாவது சிறுவர்களை அடிப்பதற்கான கழிகள் இருக்கும்.

✽ தென் கொரியாவில் கல்லூரிப் பெண்கள் குதிகால் பக்கம் உயர்ந்த பாதமுள்ள காலணிகளை அணிவது தடை செய்யப்பட்டிருக்கிறது. முதுகுப் பக்கமும், மார்புப் பக்கமும் அதிகம் தெரியும்படியான ஜாக்கெட்டுகளையும் அணியக் கூடாது.

காரிலேயே உங்களைக் கொண்டு போய் விடச் சொல்கிறேன்'' என்று பாரதி பரிவோடு வேண்டினாள். அவன் அதற்கு இணங்க வில்லை.

''உங்கள் அழைப்புக்கு நன்றி! மன்னிக்க வேண்டும். இந்தப் பாதையாக மதுரைக்குப் போகிற காய்கறி லாரி ஏதாவது வரும். அதில் ஏறிப் போய்க் கொள்கிறேன் நான். நீங்கள் வீட்டுக்குத் திரும்புங்கள்.''

அதற்கு மேல் அவனை வற்புறுத்த விரும்பவில்லை அவள். ''புரொபஸர்! நீங்கள் ஒரு கல்லூரிக்கு மட்டும் புரொபஸர் இல்லை! சமூகத்துக்கே புரொபஸராகிற தகுதி உங்களுக்கு இருக்கிறது. எந்த நாட்டுக்குச் சென்றாலும், எத்தனை ஆண்டுகள் கழித்து வந்தாலும் முடிந்தால் மறுபடி எங்கள் கல்லூரிக்கு வாருங்கள். நீங்கள் என்று வந்தாலும் உங்கள் மாணவியாகவே நான் உங்களை வரவேற்பேன்'' என்று நாத் தழு தழுக்கக் கூறிக் கீழே குனிந்து அவன் பாதங்களை வணங்கினாள் பாரதி. அப்படி வணங்கும்போது ஞாபகமாக அதில் ஏற்கெனவே சமர்ப்பணமாகி விட்ட ஒருத்திக்கு மரியாதை செய்வதுபோல் அந்தப் பாதங்களிலிருந்து இரண்டடி விலகித் தன் கைகள் அந்தப் பொன்னிறப் பாதங்களைத் தீண்டி விடாமல் தள்ளியிருந்து வணங்கினாள் பாரதி. சாலையில் ஏதோ லாரி வந்தது. கைநீட்டி நிறுத்தி, 'மதுரையில் கொண்டு போய் விட முடியுமா?' என்று சத்தியமூர்த்தி அதில் இடம் கேட்டபோது அவர்கள் சம்மதித்தார்கள். சத்தியமூர்த்தி முன்புறம் லாரி டிரைவருக்கருகே ஏறி உட்கார்ந்து கொண்டு பாரதிக்கு விடை கொடுத்தான். லாரி நகர்ந்தது. பாரதி பிரமை பிடித்தாற் போல் வெகு நேரம் அந்த இடத்திலேயே நின்று கண்ணீர் சிந்தி அழுது கொண்டிருந்தாள். பின்பு இறுதியாக அவன் கால்கள் நின்ற இடத்தைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டு காரில் ஏறி வீட்டுக்குத் திரும்பினாள்.

இப்பால் லாரி மலைச் சாலையில் வளைந்து வளைந்து கீழிறங்கியது. சாரலும் இருளும் காற்றும் நிறைந்த அந்த இரவில் வாழ்க்கையின் அழகுகள் எந்த இடத்திலிருந்து ஆரம்பமாவதாக முன்பு ஒரு சமயம் அவன் நினைத்துக் கொண்டிருந்தானோ அந்த இடத்தில் இப்போது அவை முடிந்து போய் விட்டதாகத் தோன்றியது. மோகினியின் மரணமாகிய அந்தச் சோகம் இன்று அவனைக் கீழே வீழ்த்தி விட்டது என்பது உண்மைதான். 'ஆனால் கீழே விழுவது மீண்டும் எழுவதற்காகவே' என்ற மனித உணர்ச்சியையும் அவனால் இழக்க முடியவில்லை. வாழ்க்கையில் இன்னும் வலது காலை முன் வைத்து அவன் நடந்துதானாக வேண்டும். எத்தனையோ நீண்ட, முடிவற்ற பல பாதைகளில் நடக்க வேண்டும். லாரி போகிற சாலைக்கு மேலே இருண்ட வானத்தில் எங்கிருந்தோ மோகினியின் குரல், **'மானிடவர்க்கு என்ற பேச்சுப்படின் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!'** என்று பாடுவது போலவும் தின்பதற்கு மட்டுமல்லாது தின்னப்படுவதற்கென்றே அமைந்தாற்போன்ற பற்கள் தெரியச் சிரிப்பது போலவும் பிரமை வந்து அவன் கண்களை நனைத்தது. அவளுடைய நளின பாதங்களின் சலங்கை ஒலியும் எங்கிருந்தோ கேட்டது.

* * *

பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பின் மேற்கு ஜெர்மனிக்குப் புறப்படுவதற்காகச் சத்தியமூர்த்தி பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்தபோது குமரப்பன் மட்டும் வழியனுப்ப வந்திருந்தான். விமானத்தில் ஏறவேண்டிய விநாடிவரை நண்பனோடு பல செய்திகளை மனம் விட்டுப் பேசிக்கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. அன்று காலை பம்பாய்க்கு வந்ததும் சென்னைத் தினசரி ஒன்றில் அந்தச் செய்தியைப் படித்திருந்தார்கள் அவர்கள். கள்ள நோட்டுத் தயாரிக்கும் இரகசியக் குழுவில் முக்கியமான சம்பந்தமிருப்பதாக மஞ்சள்பட்டி ஜமீன்தாரும், குத்துவிளக்கு மானேஜர் கண்ணாயிரமும் கண்டுபிடிக்கப்பெற்றுக் கைது செய்யப் பட்டிருப்பதாக வெளிவந்திருந்த செய்தியைக் குமரப்பன் நண்பனுக்குப் படித்துக் காட்டியிருந்தான். விமானம் புறப்படுகிற நேரம் வந்ததும் நண்பனிடம் கூறி விடை பெற்றுக்கொண்டு உள்ளே சென்று அமர்ந்தான் சத்தியமூர்த்தி. விமான நங்கை ஒரு டிரே நிறைய இனிப்புக்களை வைத்துக் கொண்டு எல்லார் முன்பும் நீட்டி எடுத்துக் கொள்ளச் செய்தவள், சத்தியமூர்த்தியிடமும் வந்து 'ஸ்வீட்ஸ்' என்று சொல்லிச் சிரித்தபடியே டிரேயை நீட்டினாள். அவனுடைய வலது கை ஒரு கணம் முன்னால் நீண்டு மிட்டாயை எடுக்கச் சென்றது. அடுத்த கணமே அந்தக் கையிலிருந்த நீலக் கல் மோதிரத்தில் யாருடைய முகமோ வந்து தெரிந்து அவனைத் தயங்க வைத்தது. கண்ணும் மனமும் கலங்கியபடியே கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு, ''ஸாரி! ஐ ஆம் இன் நோ மூட் டு ஹேவ் ஸ்வீட்ஸ். மை ஸெல்ப் ஹாஸ் பிகம் ஸச் அஸ் நாட் டு திங்க் ஆப் ஸ்வீட்ஸ்'' என்று தளர்ந்த குரலில் அவன் கூறினான்.

# தலைவலியிலிருந்து

## நல்ல, நிச்சயமான நிவாரணம்



அனஸின் இவ்வளவு சக்திவாய்ந்ததாக இருப்பதற்குக் காரணம் அது ஒரு டாக்டரின் குறிப்பைப்போன்று மருந்துகளின் சேர்க்கையாகும்—துரிதமாகவும் நிவாரணமளிக்கிறது.


அனஸினில் வலியிலிருந்து நிவாரணம்பெறுவதற்கென உபரியாக ஒரு வலி நிவாரணி கலந்திருக்கிறது.


அனஸின் சாதாரணமாகத் தலைவலிக்குக் காரணமான நரம்புகளின் படபடப்பைப் போக்குகிறது.


அனஸின் ஜுரத்தைத்தணிக்க உதவுகிறது.


அனஸின் உபயோகிப்பதால் வலி மற்றும் ஜுரத்தினால் ஏற்படும் சோர்வு நீங்குகிறது.

# அனஸின்

**சிறந்தது எனெனில் அது**
**4 வழிகளில்**
**வேலை செய்கிறது**

2 வில்லைகளுக்கு 13 ந. பைசேதான்

*Registered Users:* GEOFFREY MANNERS & CO; LTD.

TAM

'எக்ஸ்க்யூஸ் மீ' என்று சொல்லி விட்டு விமான நங்கை அடுத்த பிரயாணியை நோக்கி நகர்ந்தாள். விமானம் புறப் பட்டது.

அந்த மன நிலையில் விமானத்தில் பக்கத்திலிருந்தவர் தன்னிடம் பேச்சுக் கொடுக்காமலிருப்பதற்காகக் கையோடு கொண்டு வந்திருந்த நவநீத கவியின் புதிய கவிதைத் தொகுதியான 'மான ஸிக நினைவுகள்' என்ற புத்தகத்தைப் பிரித்தான் சத்தியமூர்த்தி.

''காம்பிற் பூத்து மண்ணடைந்தாள் - ஒரு
கைபடாத தெய்வ மலரானாள்
கண்ணாடி மேனிப்
பண்ணாரும் மணிமொழியாள்
ஆம்பல் மணக்கும்
அரவிந்த மதிமுகத்தில்
ஓங்கி நிமிர்ந்து
உலகளக்கப் பளபளக்கும்

உல்லாச மோகனச்
சல்லாபத் திருவிழியாள்
கள்ளாடு மணமலர்கள்
தள்ளாடிச் சரிந்துபுரும்
கொள்ளாத கருங்குழலாள்

விங்கித் தணிந்த
வீணைத் தண்டொப்பத்
தாங்கிச் சரிந்தசிறு
தமனிய மூழுந்தாளில்
சரிகைத் துணியாடத்
தரையாடும் சிறடியாள்
ஏங்கியுருகக் கண்பார்க்கும்
இனியபார்வை நலமுடையாள்...''

....என்று அந்தக் கவிதையைப் படிக்கத் தொடங்கியவன் மேலே படிக்க முடியாமல் ஞாபகத்தில் அலை மோதும் மோகினியைப் பற்றிய எண்ணங்களினால் கண்களில் நீர் பெருகித் திரையிட்டு மறைத்தது. 'கள்ளாடு மண மலர்கள் தள்ளாடிச் சரிந்துபுரம் கொள்ளாத கருங்குழலாள்' என்ற ஒரே வரியைத் திரும்பவும் நினைத்த போது தாங்க முடியாத துயரம் அவன் மனத்தைக் கனக்கச் செய்தது. ஜெட் விமானம் உள்ளே யிருப்பவர்களுக்கே அந்த வேகம் தெரியாதபடி நள்ளிரவில் மிக வேகமாகப் பறந்துகொண்டிருந்தது. விமானத்துக் குள்ளே மென்மையான நறுமணமும் குளுமையான விளக்கொளியும் இதமா யிருந்தன. ஆகாய விமானப் பயணத்தைப்போல் பூமியின் சுக துக்கங்கள் ஒட்டாமலே யாராலும் வாழ்ந்து விட முடியாது — விமானம் எவ்வளவு உயரத்தில் பறந்தாலும் மறுபடி தரையில் இறங்கியாக வேண்டியிருப்பது போல் மனித இலட்சியங்களும் மண்ணின் வாழ்க்கையோடுதான் இணைந்திருக்கின்றன.

வாழ்நாள் முழுதும் நினைத்து வருந்துவதற்குரிய சில துயரங்களும் நினைத்து மகிழ்வதற்குரிய சில மகிழ்ச்சிகளும் ஒவ்வொரு மனிதனுடைய வாழ்விலும் நிச்சயமாக இருக்கும். அவை சத்திய மூர்த்தியின் வாழ்விலும் இருந்தன. பார்க்கப் போனால் சந்தோஷமும் மனித மனத்துக்கு ஒரு விலங்குதான். ஏனென்றால் அதையடுத்துத் துக்கம் வரும்போது யாராலும் கலங்காமலிருக்க முடிவதில்லை. சத்தியமூர்த்தியின் கண்ணீருக்கும் இன்று மோகினிதான் காரணமாயிருந்தாள். எப்போதோ ஒரு சில சமயங்களில் அவனுடைய மகிழ்ச்சிக்கும் மோகினிதான் காரணமாக இருந்தாள். அவளுடைய ஞாபகம் ஒரு விலை மதிப்பற்ற விலங்காக அவனைப் பிணித்திருக்கிறது. அறிவும் திறமையும் தோற்றப் பொலிவுமுள்ள சத்தியமூர்த்தி சொந்த நாட்டுக்குத் திரும்பிவந்து மீண்டும் எதிர் காலத்தில் எத்தனையோ பெரிய பெரிய சாதனைகளை யெல்லாம் தேசத்துக்காகவும் தன் குடும்பத்துக்காகவும் சாதிக்க முடியலாம். ஆனால் அந்த எல்லாச் சாதனைகளுக்காகவும் அவன் தானே பெருமிதப்பட்டுப் புன்முறுவல் பூக்கும் ஒவ்வொரு விநாடியும் உள்ளே யாருடைய ஞாபகமோ வந்து அவனை அழவைக்கும். மோகினியும் இந்த அநுதாப ஞாபகத்தைத்தான் அவனிடம் விரும்பினாள். அவனுடைய மனம் அவளுடைய கோயில். அவளுக்கு மட்டுமே சொந்தமான கோயில். மறுபடி அவளை எப்போதாவது எந்தப் பிறவியிலாவது சந்திக்கிறவரை கண்ணீராலும் அமைதியாலும் அவன் மனம் அவளை அந்தரங்கமாக உபசரித்துக் கொண்டே இருக்கும். உணர்ச்சிகரமான அந்த உபசரிப்பை இன்னும் அதிகமாக விளக்கிச் சொல்ல முடியாததற்காக வாசகர்கள் மன்னிக்க வேண்டும். ஏனென்றால், சொல்லுக்கும், நினைப்புக்கும் எந்த இடத்தில்பொருள் முடிகிறதோ அங்கேதான் உணர்ச்சி பிறக்கிறது. அந்த உணர்ச்சியைச் சொல்வதற்குச் சரியான பாஷை எதுவும் இல்லை. பலசமயங்களில் உணர்ச்சிக்குப் பாஷை கருவியாக இருந்து ஒத்துழைப்பது மில்லை.



# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்



**இளமையில் வழுக்கை**

இக்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-2 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022. பம்பாய்-1




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை காண் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.




# Silvikrin

சில்விக்ரீன்— கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/7/64

# நடப்பவைதான் நம்புங்கள்

✽ உங்கள் குழந்தையை அசடு என்று இனிமேல் சொல்லவே சொல்லாதீர்கள்! ஏனென்றால், குழந்தைகள் பெரியவர்களை விட நிச்சயமாகக் கெட்டிக்காரர்கள்தான். எப்படி? எராஸ்மி என்கிற ஸ்வீடன் தேசத்து உபாத்தியாயர் பின்வருமாறு சராசரிக் கணக்குச் சொல்கிறார்.

ஒரு வயதுக் குழந்தைக்கு மூன்று வார்த்தைகள் தெரியும். ஒன்றரை வயதுக் குழந்தைக்கு 26 வார்த்தைகள் தெரியும். நாலு வயதில் 920 வார்த்தைகளும் நாலரை வயதில் 1240 வெவ்வேறு சொற்களும் தெரியும். ஆறரை வயதுச் சிறுவன் ஆறாயிரம் சொற்களை அறிவான். அந்தச் சிறுவன் பெரியவர்களுக்கு விடும் சவால்: 'எங்கே இன்று முதல் தொடங்கி இன்னும் ஆறரை வருஷங்களில் நீங்கள் ஆறாயிரம் புதிய சொற்களைக் கற்றுக்கொண்டு விடுங்கள், பார்க்கலாம்!'



✽ அமெரிக்காவில் ப்ளாரிடா மாகாணத்தில் ஒரு குரங்கு காரோட்டிப் போவதைப் பற்றிக் கேள்விப்பட்டார்கள். உடனே போலீஸ் கார் அதனைத் துரத்திக் கொண்டு போயிற்று. குரங்கு எழுபது மைல் வேகத்தில் ஓட்டிச் சென்ற அந்தக் காரை என்ன சமிக்ஞை காட்டி எப்படி நிறுத்தச் செய்வது என்று போலீசார் விழித்துக் கொண்டிருந்த சமயத்தில் முன் சீட்டில் குரங்குக்குப் பக்கத்தில் தூங்கிக் கொண்டிருந்த ஸ்லோவர் என்பவர் விழித்தெழுந்து போலீசார் பின் துரத்தி வருவதைப் பார்த்தார். உடனே குரங்கைத் தட்டிக் காரை நிறுத்தச் செய்தார். போலீஸார் யார் மீது கேஸ் எழுதுவது என்று புரியாமல் கடைசியில் குரங்கின் சொந்தக்காரரான ஸ்லோவரிடமே வேகமாய்ச் சென்றதற்காக 'ஸம்மன்ஸ்' கொடுத்து விட்டுப் போனார்கள். ஆனால் 'கோர்ட்டில் தங்கள் கேஸ் நிலைக்குமா? ஸ்லோவர் செய்யாத குற்றத்துக்கு ஸ்லோவரை எப்படித் தண்டிப்பது? அல்லது குற்றவாளி குரங்கு தானென்றால் குரங்குகளைத் தண்டிக்கலாம் என்று எந்தச் சட்டம் கூறுகிறது?' என்றெல்லாம் போலீஸார் குழம்பிக் கொண்டிருக்கிறார்கள். ஸ்லோவர் ஒரு சர்க்கஸ்காரர்; மிருகங்களைப் பழக்குவது அவரது தொழில்.

✽ இன்னும் இருபத்தைந்து வருஷங்களில் டெலிவிஷன் துறையில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படவிருக்கின்றன. பாக்கெட்டில் அடங்குகிற மாதிரியாகச் சிறிய டெலிவிஷன் செட்டுகள் தயாரிக்கப்படும். கண் பார்வை இழந்தவர்கள் கூட டெலிவிஷன் பார்க்கலாம்! டெலிவிஷன் எழுப்பும் மின்சார அலைகள் மூளையில் பிரதிபலித்து அதன் காரணமாகக் குருடர்களும் டெலிவிஷன் காட்சியை உணரலாம்! செயற்கைக் கோள்கள் மூலம் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு மட்டுமின்றி ஒரு கண்டத்திலிருந்து மற்றொரு கண்டத்துக்கே கூட டெலிவிஷன் காட்சிகளை அனுப்பி வைக்கும் வித்தையில் இன்றைக்கே விஞ்ஞானிகள் பெருமளவு வெற்றி கண்டிருக்கிறார்கள்.

✽ ஜான் ஆடம்ஸ் எழுதுகிறார்: உலகிலேயே மிகச் சிறிய மனிதர் இங்கிலாந்தில் இன்று வாழ்ந்து வரும் பெஹ்ரென் என்ற ஜெர்மானியர். அறுபத்தி நாலு வயது நிரம்பிய இவர் உயரம் முப்பது அங்குலம். இவர் தமக்கென ஒரு வீடு கட்டிக் கொண்டு அதில் குழந்தைகளுக்கான மேஜை, நாற்காலி, கட்டில்களைப் போட்டு வைத்திருக்கிறார். இருபத்தி நாலு அங்குல உயரமுள்ள பெண்ணை இவர் திருமணம் செய்துகொண்டார். சர்க்கஸ் போன்ற காட்சிகளில் வேலை பார்த்த இவர் உலகம் தம்மிடம் அன்பும் ஆதரவும் காட்டி வந்திருக்கிறது என்று திருப்தியுடன் கூறுகிறார். குறைந்த உயரமுள்ள வேறு சிலர்: ஸ்பெயின் நாட்டில் பிரான்ஸிஸ்கோ — உயரம் — ஓரடி பதினொரு அங்குலம் — இவருக்கு மூன்று பெண்கள் உண்டு. ஐம்பதாவது வயதில் இறந்துபோனார்.



ஜெர்மனியில் வால்டர் — உயரம் இருபதரை அங்குலம். இறந்தது 1955ல், நாற்பத்தெட்டாவது வயதில்.

எடித் பார்லோ — இருபத்திரண்டு அங்குல உயரம். எடை பதினேழு பவுண்டு.

இவ்வாறு சில மனிதர்கள் உயராமலே இருந்து விடுவதற்குக் காரணம் மூளையுடன் ஒட்டியது போல் இருக்கும் பிட்யூடரிகோளம் சரியானபடி இயங்காமல் போவதுதான். பட்டாணிக் கடலை அளவுக்குச் சிறியதாக இருக்கும் இந்தக் கோளம் நன்றாகச் செயல்படச் சிரசாசனம் போடலாம்.

✽ மேற்கு ஜெர்மானிய டாக்டர் எரிக் போமர் என்பவருக்குக் கோழிக் குஞ்சுகளின் பழக்க வழக்கங்களெல்லாம் அத்துப்படியாகி விட்டன. அது மட்டுமா? அவை பேசும் மொழியும் அவருக்குத் தெரியும். கோழிக் குஞ்சுகளின் மொழியை அவர் டேப்ரிகார்டு செய்து வைத்திருக்கிறார். வெறும் கூவலாகவும் கூச்சலாகவும் நமக்குத் தோன்றும் சப்தங்களுக்கு அவர் தனித்தனியே அர்த்தம் கூறுகிறார். சிறு வயதில் அவர் கோழிக் குஞ்சுகளைப் போல் சத்தம் எழுப்பிப் பெரிய கோழிகளுக்குக் குழப்பம் உண்டு பண்ணுவாராம். இப்படி விளையாட்டாக ஆரம்பித்த பழக்கம்தான் விஞ்ஞான ரீதியான ஆராய்ச்சியில் கொண்டுபோய்விட்டது!



# நீரோட்டம்

எஸ். ரங்கநாயகி

தியாகு வாசலில் உட்கார்ந்திருந்தான். கல்லூரிக்குப் போய்த் திரும்பிய சுசிலாவைப் பார்த்ததும் ''நான்தான் அப்பொழுதே சொன்னேனே! பெண்கள் செஸ் விளையாடி வெற்றி அடைந்துவிட முடியுமா?'' என்று அவளை வம்புக்கு இழுத்தான் அவன்.

''அதெல்லாம் சும்மா பேச்சு. இந்தச் சித்தி எதிலுமே பின்னடித்தான் இருப்பாள்....'' என்றாள் சுசிலா.

''பின்னடி இருந்தபடியே முன்னடி ஜெயிச்சுட்டேன் சுசிலா. உனக்கு வெற்றிதான்.'' உள்ளிருந்தபடியே யசோதை குரல் கொடுத்தாள்.

யசோதை இப்படிச் சொன்னதும் சுசிலாவின் மெய்சிலிர்த்தது.

'சித்தி என்ன சொல்கிறாள்? என் சார்பாக அவள் 'செஸ்' ஆடி ஜெயித்தது போல் 'சுசிலாவைக் கல்யாணம் செய்துகொள்' என்று தியாகுவுடன் சித்தி வாதாடி வெற்றி பெற்றிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' இப்படி எண்ணமிட்டது அவள் மனம். ஆனால் தனக்கேற்பட்ட பரபரப்பை வெளியே காட்டிக் கொள்ளாது விருட்டென உள்ளே நுழைந்து சென்றாள்.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. நான்தான் போனால் போகட்டும் என்று உன் சித்திக்கு விட்டுக் கொடுத்தேன்....'' தியாகுவும் சுசிலாவின் பின்னே உள்ளே நுழைந்தபடி கூறினான்.

''குப்புற விழுந்தும் மீசையில் மண் ஒட்டவில்லையாக்கும்.''

''சுசிலா!'' மாடியிலிருந்து குரல் வந்தது. தந்தை வந்துவிட்டதை அப்பொழுதுதான் அறிந்தாள் சுசிலா.

அப்பா கூப்பிடுகிறாரே! ஒருகால் உமாபதியின் தாயார் கூறியது போல்.... ''என்னப்பா?'' என்று கீழிருந்தபடியே கேட்டாள் சுசிலா.

''சீக்கிரம் டிபன் காப்பியைக் கொண்டு வாம்மா. நான் வெளியே போக வேணும்.''

நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள் சுசிலா. அப்பா சாதாரணமாகத்தான் பேசுகிறார்.

மறுநாள் மாலை தியாகு யசோதையிடம் வந்து, ''யசோதை! இன்று சபாவில் நல்ல நாடகம் நடக்கப் போகிறது. மூவரும் போகலாமே!'' என்றான்.

''தலை வலிக்கிறது தியாகு. நீமட்டும் போய் வா. நாங்கள் வரவில்லை'' என்று யசோதை கூறிவிட்டாள்.

சுசிலாவுக்கோ அந்த நாடகத்துக்குப் போகவேண்டுமென்று நிரம்ப ஆசை. ''சித்தி, நீ வராவிட்டால் போயேன். நாங்கள் மட்டுமாவது நாடகத்துக்குப் போய்விட்டு வருகிறோமே!'' அவள் அடம் பிடிக்க ஆரம்பித்ததும் யசோதை திடுக்கிட்டு நின்று விட்டாள்.

வயது வந்த பெண். இவனுடன் அவளைத் தனித்து எப்படி அனுப்புவது? ''வேண்டாம் சுசிலா, அடுத்த முறை வரும்போது நாம் பார்த்துக்கொள்ளலாம்'' என்று கூறினாள் யசோதை. தியாகுவும் அவளது கருத்தை அறிந்து, ''சரி யசோதை! நானே போகவில்லை'' என்று கூறினான்.

''முடியாது. இன்று கண்டிப்பாகப் போய்த்தான் ஆக வேண்டும்'' என்று முரண்டு செய்ததோடு நில்லாமல் தந்தையிடம் அனுமதியும் கேட்டு விட்டாள் சுசிலா. ''அப்பா! நான் தியாகுவுடன் நாடகத்துக்குப் போகிறேன். சித்திக்குத் தலைவலியாம். வரவில்லை என்கிறாள். நானும் போகக் கூடாது என்கிறாள்'' என்று சிறு குழந்தை போல் கூறினாள்.

யசோதைக்குச் சுசிலாவைத் தடுக்க அதிகாரமில்லை என்பது போல் ராஜு மகளுக்கு அனுமதி தந்து விட்டார்.

யசோதை செய்வது புரியாமல் நின்று விட்டாள். பிறகு தியாகுவைத் தனியே கூப்பிட்டு, ''தியாகு! நீதானப்பா நம்பிக்கை உள்ளவனாக நடந்து கொள்ள வேண்டும்'' என்று நம்பிக்கை யாசகக் குரலில் கேட்டாள்.

''யசோதை! நீ என் கையில் கிடைத்திருக்க வேண்டியவள். விலகிவிட்டாய். உன்னிடமே நான் நெருப்பாக இருக்கத்தானே விரும்புகிறேன். சுசிலாவைப் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்த்து விடுவேன். பயப்படாதே!''

இருவரும் நாடகத்துக்குச் சென்றதும் ராஜுவும் எங்கேயோ புறப்பட்டுச் சென்று விட்டார்.

யசோதை யோசனையில் ஆழ்ந்து கிடந்தாள். இவர் ஏன் இன்னும் சுசிலாவின் விவாகத்தில் முனையாமல் இருக்கிறார்...? சுசிலா தியாகுவிடம் பழ

கும் விதத்தை நோக்கினால் அவளை அவன் நேசிப்பதாகவே தெரிகிறது. இருவரையும் சேர்த்துப் பிணைத்துவிடுவதில் தவறொன்றுமில்லை. தியாகு நன்றாகச் சம்பாதிக்கிறான். நல்ல பையன். சுசீலாவின் அப்பாவிடம் இதைப் பற்றி எப்படிக் கூறுவது? அவரோ பேசக்கூடத் தயங்குகிறார். அவர் ஒப்பவில்லை என்றால் தியாகுவை இங்கு அதிக நாட்கள் தங்க விடுவது சரியில்லை...

''ராஜூ!'' வாசலில் குரல் கேட்டது. யசோதை எழுந்து சென்று நோக்கினாள். உமாபதி முன் வராந்தாவில் நின்றுகொண்டிருந்தார்.

''அவர் வெளியே போயிருக்கிறார்.''

''ஓ, அப்படியா?'' என்று கூறியவர் விடை பெறாமல் அங்கேயே நிற்பதைப் பார்த்ததும் அவர் ஏதோ கூறத் தயங்குகிறார் என்பதை உணர்ந்தாள் யசோதை.

''ஏதேனும் விஷயம் சொல்ல வேண்டுமா? அவர் வரும்வரை இருந்து விட்டுப் போகலாமே?''

''இல்லை... நான் போகிறேன்.....வந்து .... ஒரே ஒரு விஷயம் .... அன்று வந்தானே.... அந்தப் பையன்....''

''தியாகுவைச் சொல்கிறீர்களா?''

''ஆமாம்...அவனும் சுசீலாவும் நாடகத்துக்குப் போவதை அனைவரும் பார்த்திருக்கிறார்கள். திரும்பி வரும்போது நேரமாகும்.... நான் சொல்வதைத் தப்பாக நினைக்கக் கூடாது....வயதுப் பெண்... சித்தி அவளைத் தான்தோன்றித்தனமாக வளர்த்து விட்டு விட்டாள் என்ற அபவாதம் உங்களுக்குக் கிடைக்கக் கூடாது... ஏதோ, வெளியே



சிலர் கூறிய பேச்சு காதில் விழுந்தது... சுசீலாவிடம் சற்றுக் கண்டிப்பாக நீங்கள் நடந்து கொள்வது நல்லது....''

யசோதைக்குத் திக்கென்றது. ''அவள் அப்பாவிடமே அவள் அனுமதி பெற்றுப் போய்விட்டாளே. நான் என்ன செய்வது? ... உங்கள்

நண்பரிடம் அவள் விவாகத்தைப் பற்றி நீங்கள் நினைவுபடுத்தினால் நல்லது...'' அந்த வேளைக்கு அவ்வளவுதான் அவளால் சொல்ல முடிந்தது.

உமாபதி சென்ற பிறகு யசோதையின் நெஞ்சில் தீராத் துயரம் படர்ந்தது. சுசீலாவின் அப்பாவோ தன்னை இன்னமும் புரிந்துகொள்ளாமலிருக்கிறாரே! இவரிடம் எப்படித் தான் நேர்முகமாக நின்று இவ்விஷயத்தைக் கூறுவது? உலகத்தாருக்கு என்ன, தான் எந்த விதமாக நடந்து கொண்டாலும் இப்படித்தான் தவறாகப் பேசத் தொடங்குவார்கள்....

ராஜு வெளியிலிருந்து திரும்பிவிட்டார். சாப்பிட்டானதும் மாடிக்குச் சென்று விட்டார்.

பத்து அடி முன்னும் எட்டு அடி பின்னுமாக எப்படியோ மாடியை அடைந்து விட்டாள் யசோதை.

ராஜுவின் அறைக் கதவை மெள்ளத் திறந்தாள்.

என்றுமில்லாத வழக்கமாக அந்த இரவு நேரத்தில் யசோதையை அங்கு கண்டதும் ராஜுவுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''என்ன?'' அதிகாரத் தொனியாக வந்த குரலைக் கேட்டதும் யசோதை திடுக்கிட்டுச் சப்த நாடியும் ஒடுங்க நின்று விட்டாள்.

முதலெடுப்பிலேயே அவர் இவ்வளவு கடுகடுப்பாக ஆரம்பிப்பார் என்று யசோதை நினைத்திருக்கவில்லை.

யசோதை சற்றுத் திடுக்கிட்டவளாய் அங்கேயே நின்றிருந்தாள். பிறகு தலையைக் குனிந்தபடியே மௌனமாகத் திரும்பினாள். கீழே இறங்க முதல் படியில் காலடி வைத்தாள்.

ராஜுவின் மனத்தை அவள் மௌனம் தொட்டிருக்க வேண்டும். ''யசோதை!'' என்று குரல் கொடுத்தார். யசோதை உன்னிப்பாகக் கேட்டாள். கோபத்துக்குப் பதில் பரிவு கண்டிருந்தது குரலில். அவள் திரும்பி நோக்கினாள்,

''யசோதை! என்ன வேண்டும்?''

பெண்ணின் விவாகத்தைப் பற்றிப் பேச்செடுத்தால் பெண்ணை விரட்டி விட்டுத் தான் வசதியாக இருக்கத் திட்டமிடுவதாக நினைத்து விடுவாரோ என்ற அச்சம் யசோதைக்கு. மெல்ல மெல்லக் கூறினாள் அவள்.

'' சுசீலாவுக்கு விவாகம் செய்து வைக்க வேண்டாமா?''

ராஜு பதிலே கூறவில்லை.

அந்த மட்டும் யசோதை துணிவு கொண்டாள். ''தியாகுவும் நல்ல சம்பளத்தில் நல்ல வேலையில் இருக்கிறான். வேறு பிக்கல் பிடுங்கல் ஒன்றும் கிடையாது. சுசீலாவும் தியாகுவை விரும்புவதாகத்தான் தெரிகிறது.... நீங்கள் சம்மதம் கொடுத்தால் முடித்துவிடலாம்.''

யசோதை பதிலை எதிர்பார்த்துச் சற்று நின்றாள். ராஜு பதில் ஒன்றுமே கூறவில்லை. யசோதை கீழே இறங்கி வந்து விட்டாள். அதற்குப் பிறகு அதைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்க விரும்பவில்லை. தியாகுவும் சுசீலாவும் நாடகத்தி லிருந்து திரும்பிய பிறகு அவர்கள் விமர்சனத்திலும் அவளுக்குப் புத்தி ஓடவில்லை.

**ம**று நாள் மாலை ராஜு சுசீலாவை மாடிக்குக் கூப்பிட்டு அவளிடம் ஏதோ கேட்டுக் கொண்டிருந்ததை யசோதை உணர்ந்தாள். சுசீலா குதி நடை போட்டபடி கீழே வந்ததை அவள் கவனித்தாள். தியாகுவைக் கண்டதும் சுசீலாவிடம் திடீரென்று வெட்கம் சூழ்ந்ததையும் அவள் கவனிக்கத் தவறவில்லை. மகளுக்கும் தந்தைக்குமிடையே விவாகத்தைப் பற்றித்தான் பேச்சு நடந்திருக்க வேண்டும்.

இரவு சாப்பாட்டு நேரத்தின் போது ராஜு, தியாகுவிடம் நேரிடையாக, ''தியாகு! சுசீலாவை உனக்குப் பிடித்திருக்கிறதல்லவா? உனக்கே அவளை விவாகம் செய்து கொடுக்க விரும்புகிறேன். உன் மாமாவுக்கு இது பற்றி எழுதி விடட்டுமா?'' என்று கேட்டதும் தியாகு ஸ்தம்பித்து விட்டான். சுசீலா தன்னைக் கண்டதும் ஏன் அப்படி வெட்கி ஓடினாள் என்பது அப்பொழுதுதான் அவனுக்குப் புரிந்தது.

''கரும்பு தின்னக் கூலி வேண்டுமா?'' என்று தன் பதிலைக் கூறிவிட்டான் அவன்.

யசோதையின் உள்ளமோ மகிழ்ச்சியினால் நிரம்பியது. மற்றொரு வேலையும் அவள் செய்து விட்டாள். மறு நாளே தியாகுவைத் தன் ஊருக்குக் கிளப்பி அனுப்பி விட்டாள். கல்யாணம் ஆகும் வரை இருவரும் பிரிந்திருப்பதே நல்லது என நினைத்தாள் அவள்.

தியாகு ஊருக்குச் சென்றதும் சுசீலா பொழுதைக் கழிக்க நூலகத்துக்குச் சென்றாள். ராஜு வழக்கம்போல் காரியாலயத்துக்குப் போய் விட்டார். யசோதை தனித்திருந்தாள். அப்பொழுது உமாபதி வந்தார்.

''அவர் ஆபீசுக்குப் போய் விட்டாரே!'' என்று யசோதை கூறினாள்.

''பாதகமில்லை. நீங்கள் கேட்டுக் கொண்டது போல் ராஜுவிடம் மறு

நான் காலையே சுசீலாவின் விவாகத்தைப் பற்றிக் கூறினேன். அதன்படியே சுசீலா, தியாகு இருவரிடமும் சம்மதம் பெற்று விட்டதாக இன்று காலைதான் ராஜு வந்து கூறினான்......'' என்று கூறிவிட்டு, ''சுசீலா வீட்டில் இல்லையா?'' என்று கேட்டார்.

''இல்லை. அவள் லைப்ரரிக்குப் போய் விட்டாள். தியாகுவை ஊருக்கு அனுப்பி விட்டேன். நீங்கள் செய்த உதவிக்கு வந்தனம்'' என்றாள் யசோதை.

அவர் சென்ற பிறகு, தன் கணவருக்குத் தன் மீது இன்னமும் முழு மதிப்பு விழவில்லை என்பதை அவள் புரிந்து கொண்டாள். எப்படியோ சுசீலாவுக்கு விவாகம் நிச்சயமானதைக் குறித்து அவள் மகிழ்ச்சியே அடைந்தாள்.

**வீ**டு இன்னமும் கலகலப்பாகவே காணப்பட்டது. கல்யாணச் சந்தடி ஓயவில்லை. தியாகுவுக்குப் பெற்றோர்கள் இல்லையாதலால் யசோதையின் பெற்றோர்களே சம்பந்தி முறையில் வந்து கல்யாணத்தை முடித்து விட்டார்கள்.

''அக்கா! ரொம்ப அழகாக இருக்கிறாளடீ உன் ஓரகத்தாள் மகள்'' என்று காதோடு கிசுகிசுத்தாள் யசோதையின் தங்கை தேவகி.

சுசீலாவுக்கும் சித்தியின் வீட்டாரிடம் நிரம்பப் பற்றுதல் ஏற்பட்டுவிட்டது. யசோதையின் தங்கைகளிடம் அவள் ஒட்டி ஒட்டிப் பழகினாள்.

''சுசீ! மாமியார் வீட்டாரை இப்பொழுதே சுல்லாய் போட்டு விடப் பார்க்கிறாயா? அதெல்லாம் அங்கு பலியாது. ரொம்பவும் கண்டிப்பானவர்கள். வேண்டியதெல்லாம் குறைவில்லாமல் வாங்கிக் கொண்டு விடுவார்கள், ஜாக்கிரதை!'' யசோதை கண்களைச் சிமிட்டியபடி வேடிக்கையாகக் கூறினாள்.

''உன்னைப் போல ஒரு சித்தியை எனக்குப் பரிசாக அளித்திருக்கிறார்களே, அதற்கு அவர்களுக்கு என்ன வேண்டுமானாலும் கொடுக்கலாம் சித்தி! நான் கூறுவது சரிதானே தேவகி?'' சுசீலாவும் சளைக்காமல் பதில் கூறினாள்.

அருகிலிருந்து இதைக் கேட்டுக் கொண்டிருந்த யசோதையின் தந்தை பெருமிதம் கொண்டார். மூத்தவன் மகளே சித்தியைப் புகழ்கிறாள் என்றால் யசோதை எவ்வளவு நல்ல பெண்ணாக நடந்து கொண்டிருக்க வேண்டும்! சுசீலாவும் நல்ல பெண்தான் போலும்! யசோதையிடம் ஒட்டிக் கொள்கிறாள். ஏதோ கடவுள்தான் யசோதையைக் காப்பாற்றி யிருக்க வேண்டும். இல்லாவிடில் முதலில் நிச்சயித்திருந்த இடத்தில் கொடுத்திருந்தால்..... அப்பப்பா! நினைக்கவே கஷ்டம்......அந்தக் கிழவன் இறந்து ஒரு மாதம் ஆகி விட்டது....



''உங்க பிள்ளைக்கு அரசியல் பைத்தியம் அதிகமாப் போச்சு. சமையலில், வைடமின், உப்பு ருசி, புளி ருசி எல்லாம் ஆராய்ச்சி செய்தது போக மறைமுக வரி எவ்வளவு இருக்கும் என்று ஆராய்ச்சி செய்திண்டு சாப்பிடமாட்டேங்கறான்!''

பெருமூச்சு ஒன்று அவரிடமிருந்து வெளிப்பட்டது..... என்ன செய்வது. இன்னும் கொஞ்சம் பொறுமையோடு காத்திருந்தால் தியாகுவுக்கே கொடுத்திருந்திருக்கலாம். யசோதையே அதைப் பற்றிக் கூறாமலிருக்கும் போது நான் ஏன் அதைப் பற்றி நினைக்க வேண்டும்?

இதன் நடுவே அவர் மனத்தில் வேறு ஒரு கவலையும் உறுத்தியது. மாப்பிள்ளை மட்டும் யசோதையோடு ஒட்டிப் பழகுவதாகவே தெரியவில்லையே! எடுத்ததற்கெல்லாம் தம் பெண்ணிடமே அவர் யோசனை கேட்கிறாரே.....

மகளிடமே தனித்து ஒரு முறை கேட்டு விட்டார். ''யசோதை! மாப்பிள்ளை உன்னிடம் சரியானபடிதானே நடந்து கொள்கிறார்?''

யசோதை தந்தையை ஏறிட்டு நோக்கினாள். பிறகு, ''எல்லாம் தெரிந்து தானே நீங்கள் இந்த இடத்தில் விவாகம் செய்து கொடுத்தீர்கள்?'' என்று கேட்டாள்.

தந்தைக்குத் திக்கென்றது. எந்தப் பொருளில் இவள் கூறுகிறாள்? அவள் பேச்சிலிருந்து ஒன்றும் ஊகிக்க முடியவில்லை. 'அழகான இடமாகப் பொறுக்கினீர்களே!' என்று ஏசிக் காட்டுகிறாளோ!

''யசோதை! நீ என்னம்மா சொல்கிறாய்? உன் சம்மதத்தைக் கேட்டுத் தானே நிச்சயம் செய்தேன்? ... இப்பொழுது கஷ்டப்பட்டால் சொல்லி விடும்மா. கஞ்சியோ, கூழோ அங்



''ஏரோப்ளேனில் இது தான் உங்கள் முதல் பிரயாணமா?''

''இருங்க! இந்த விமானம் ஒழுங்காகப் போய்ச் சேரட்டும். அப்புறம் முதலா கடைசிப் பிரயாணமான்னு சொல்றேன்.''

கேயே அழைத்துப் போய் விடுகிறேன்.'' நெஞ்சு அடைக்கக் கூறினார்.

''ஐயோ! ஏனப்பா, இப்படி நெஞ்சு அடைக்கிறது? நான் சந்தோஷமாகத் தான் இருக்கிறேன். கவலைப்படாமல் இருங்கள்.....'' முகம் மலர யசோதை கூறினாள். அடைபட்ட நெஞ்சு விலகியது தந்தைக்கு. அதற்குமேல் மகளிடம் அவர் ஒன்றும் கேட்க வில்லை. யசோதையும் அங்கிருந்து உடனே அகன்று விட்டாள். தனது மலர்ந்த முகம் கூம்பிவிடப் போகிறதே என்ற பயம் அவளுக்கு.

**உ**ண்மையில் விவாகம் இவ்வளவு நன்றாக நடக்குமென்று யசோதையே நினைத்திருக்க வில்லை.

விவாக காரியத்தில் அவள் பங்கெடுக்காமல் விலகி நின்றுவிடவுமில்லை. ஒரொரு முறை சுசீலாவை இடையே நிறுத்தி வைத்துத் தன் கணவரிடமிருந்து செலவுக்கு வேண்டிய பணத்தைப் பெற்றாள். ஒரொரு முறை துணிவாகத் தானே நேரில் கேட்டு வாங்கிக் கொண்டாள். உமாபதி ரொம்பவும் உதவியாக இருந்தார். அவரது தாயும், 'பாவம், தாயில்லாப் பெண்' என்று வார்த்தைக்கொரு முறை எடுத்துக் காட்டியபடி கல்யாணக் காரியங்களில் பங்கெடுத்தாள். சுசீலாவின் தாயைச் சேர்ந்த அனைவருமே கல்யாணத்துக்கு வந்து நடத்தி வைத்தது யசோதைக்குத் திருப்தியை அளித்தது. வந்தவர்கள் அனைவரும், 'பாவம், இந்தப் பெண்ணுக்கு யார் இருக்கிறார்கள்' என்று சுசீலாவைக் குறித்துக் கூறியபோது, சுசீலா வெடுக்கென அவர்களுக்குப் பதில் கூறினாள். ''போதும் உங்கள் உருக்கம். எனக்குத் தேவையில்லை. அம்மா இறந்தபோது நீங்கள் ஒருவராவது ஆதரவு கொடுக்க முன்வரவில்லை... பாவம், சித்திதான் எனக்கு உறுதுணையாக நிற்கிறாள். அவள் ஒருத்தியே எனக்குப் போதும்'' என்று அவள் கூறிய பதில், அனைவருக்கும் எரிச்சலை உண்டாக்கியது. யசோதை சுசீலாவை அடக்கினாள். வந்தவர்கள் சண்டை சச்சரவில்லாமல் திரும்பிச் செல்வதைத்தான் அவள் விரும்பினாள்.

மற்றொருபுறம் வேறு சில வார்த்தைகளும் அவள் காதில் விழத்தான் செய்தன. ''வாய் திறவாமல் மௌனமாகவே அவள் எல்லாம் செய்கிறாள். சுசீலா பைத்தியம். அவள் வலையில் விழுந்து விட்டாள். தன் குடும்பத்துப் பையனுக்கே நிச்சயம் வேறு செய்து விவாகத்தை முடித்து விட்டாள். இனி சுசீலா சரியான அடிமைதான்......'' யசோதை அவ்வார்த்தைகளுக்குச் செவி சாய்க்க வில்லை. சுசீலாவின் காதில் விழுந்து விடாதபடியும் தடுத்தாள்.

சுசீலாவைத் தங்களுடன் அழைத்துச் சென்று இரண்டு நாட்கள் வைத்துக் கொள்ள வேண்டுமென்று யசோதையின் தந்தை விரும்பினார். தியாகுவும் சம்மதம் கொடுத்தான். சுசீலாவும் போகத் துடித்தாள். ஆனால் யசோதை இடம் தரவில்லை. தன் பிறந்த வீட்டு வறுமையைச் சுசீலா நேரில் சென்று காணுவதை யசோதை விரும்பவில்லை. ''சில நாட்களில் கல்கத்தாவைப் பார்க்க ஓடி விடப் போகிறாள். என்னுடன்தான் கொஞ்ச நாட்கள் இருந்து விட்டுப் போகட்டுமே!'' என்று கூறி விட்டாள் யசோதை.

யசோதையின் அப்பா ஊருக்குப் போக மூட்டை கட்டி விட்டார். போகும் போது கண்ணீர் மல்க அவர் மகளை நோக்கி, ''யசோதை! இளையாளாகக் கொடுத்தாலும் எவ்வளவோ பேர்கள் குழந்தையும் குட்டியுமாக இருக்கிறார்கள்.....நீயோ.... சந்தோஷமாக இருப்பதாகத்தான் சொல்கிறாய். எப்படியோ பரந்தாமன்தான் உனக்குத் துணை'' என்றார் குரல் அடைக்க.

தந்தையின் பரிவு காரணமாக நெஞ்சிலிருந்து முட்டி வந்த கண்ணீர் 'உன் வாழ்வின் உண்மையைக் கூறிவிடு' என அவளைத் தூண்டியது. அவளோ கண்ணீரைச் சட்டென அணை போட்டுத் தடுத்து விட்டாள். 'இன்னும் பொறுத்துப் பார்ப்போம்' என்ற ஒரே நோக்கோடு வாயில் வார்த்தைகள் வெளி வராமல் தடுத்தாள். மறுபுறம் சென்று அணையை மீறி வந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். **(தொடரும்)**




# கயல்விழி

**கல்கி**

ஏப்ரல்
12ந்தேதி

புத்தாண்டு மலரில்
ஆரம்பமாகிறது




# அண்ணாமலை சர்வகலாசாலை



பொட்டாசியம் குளோரேட்டுடன் மாங்கனீஸ் டயாக்சைட்டைச் சேர்த்தால் ஆக்ஸிஜன் (பிராண வாயு) கிடைக்கிறது. இந்தச் சேர்க்கையால் மாறுபாடு அடைவது பொட்டாசியம் குளோரேட். மாறுபாடு அடையாமல் கிரியா ஊக்கியாக (காட்டலிஸ்ட்)ப் பணி செய்து முன்னதிலிருந்து பிராண வாயுவைத் தோற்றுவிப்பது இரண்டாவது ரசாயனப் பொருள். இது சாதாரணமாக ஆரம்பக் கட்டங்களில் ரசாயனப் பாடம் படிக்கும் மாணவர்களுக்குத் தெரியும் விஷயம். மாங்கனீஸ் டையாக்சைட்டைப் போல எத்தனையோ கிரியா ஊக்கிகளும் உண்டு.

கல்வி வளர்ச்சி சம்பந்தப்பட்ட மட்டில் தமிழ் நாடு 1918ம் ஆண்டில் ஒரு தலைசிறந்த கிரியா ஊக்கியைப் பொதுமக்களுக்கு அளித்தது. அந்தக் கிரியாஊக்கிதான் காலம் சென்ற கொடைவள்ளல் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்கள்.

அண்ணாமலை செட்டியார் அவர்களின் சகோதரர் ராமசாமி செட்டியார் சிதம்பரம் நகரில் ஓர் உயர்நிலைப்பள்ளியைத் தோற்றுவித்து அதைச் செவ்வனே நிர்வகித்து நடத்தி வந்தார். அன்னார் 1918ம் ஆண்டில் காலமானபோது, பள்ளி மற்றும் சொத்துக்கள் முதலியவற்றின் பொறுப்பைக் கவனித்து ஓர் ஏற்பாடு செய்ய வந்த அண்ணாமலை செட்டியார் அவர்களுக்கு அப்போதுதான் ஓர் அபூர்வ யோசனை உதித்தது. தம் தமையனார் நிர்வகித்த பள்ளியிலிருந்தும் மற்றும் சுற்று வட்டாரத்திலிருந்த பள்ளிகளிலிருந்தும் வெற்றியுடன் வெளிவரும் மாணவர்களுக்கு மேற்படிப்புக்காக வசதி செய்யச் சிதம்பரம் நகரில் ஒரு கல்லூரியையே நிறுவவேண்டும் என்பதுதான் அந்த யோசனை. பள்ளியின் நிர்வாகத்துக்கான ஸ்தாபனம் ஒன்றை ஏற்படுத்த வந்த அந்த மனிதர், தம் யோசனையின் விளைவாக 1920ம் ஆண்டில் தம் தாயார் பெயரைத் தாங்கிய மீனாட்சி கல்லூரியைத் தோற்றுவித்துவிட்டார். இண்டர்மீடியட் வகுப்புடன் உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்திலேயே ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கல்லூரி சீக்கிரமே முதல்தரக் கல்லூரியாகப் பரிணமித்துச் சொந்தக் கட்டிடத்துக்கும் இடம் பெயர்ந்தது.

கல்லூரியின் ஸ்தாபகர் தம் ஆசையை இந்தக் கலை, விஞ்ஞானப் பாடங்கள் கற்றுக் கொடுக்கும் கல்லூரியுடன் நிறுத்திக் கொள்ளவில்லை. வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் தனித்தனியே சிறந்த பயிற்சி அளிக்க இரு தனிக் கல்லூரிகளையும் நிறுவினார். அதற்கு முதல்வர்களாக முதன் முதலில் பணியாற்ற வந்த இரண்டு மாமணிகள், மகாமகோபாத்யாய தண்டபாணிஸ்வாமி தீட்சதரும், மகா மகோபாத்தியாய உ. வே. சாமிநாதய்யரும் தான். 1929ம் ஆண்டில் இசைப் பயிற்சிக் கென்று ஒரு பிரத்தியேகக் கல்லூரியும் எழுந்தது. இத்தனை கல்லூரிகளையும் இணைத்து ஒரு சர்வகலாசாலையாக்கிப் பார்க்க வேண்டும் என்ற அவா ஸ்தாபகரின் உள்ளத்தில் எழுந்தது நியாயம்தானே!

ஒரு தனி சர்வகலாசாலை என்றும் அதற்கு விஸ்தாரமான தனி இடமும் வளர்ச்சிக்கான நிதி ஏற்பாடும் அவசியமல்லவா?

இடத்தைப் பொறுத்தவரை சிதம்பரம் நகரை ஒட்டிய பாடல் பெற்ற ஸ்தலமாகிய திருவேட்களம் கிராமமே கிடைத்துவிட்டது. அந்த மணல்பரப்பான இடத்தைச் சீக்கிரமே சீர்ப்படுத்திக் கட்டிடங்கள் எழுப்ப ஏற்பாடு செய்துவிட்டார். சர்வகலாசாலைக்குத் தேவையான இருபது லட்ச ரூபாய் நிதியையும் அளிக்க முன்வந்து விட்டார். மாகாண சர்க்கார் அப்புறம் தயங்கவில்லை. 1929ம் ஆண்டில் சர்வகலாசாலை அந்தஸ்தை அளித்துவிட்டார்கள். அண்ணாமலை சர்வ கலாசாலை உதயமாகியது. கல்வித் துறையில் விடா முயற்சியுடன் தமிழ் நாட்டில் ஒரு புது சர்வ கலாசாலையைத் தோற்றுவிக்கக் காரணமாக விளங்கியதற்காக சர் அண்ணாமலை செட்டியாரை ராஜா சர் அண்ணாமலை செட்டியாராக அழைத்தது தமிழகம். அவருடைய விடாமுயற்சி அவரை ஒரு முடி சூடா மன்னனாகவே ஆக்கிவிட்டது! தந்தையின் பட்டத்தை வழி வழியாகத் தாங்கும் மரபின்படி இன்று இன்னாரின் புதல்வர் ராஜா சர் முத்தையா செட்டியார் சர்வ கலாசாலையின் வளர்ச்சியில் அக்கறை காட்டுகிறார்.

அண்ணாமலை சர்வகலாசாலையின் முதல் உப அத்தியட்சகராகப் பணியாற்றி வந்தவர் சர்

சாமுவேல் ரங்கநாதன். அவரைத் தொடர்ந்து அந்தப் பீடத்திலமர்ந்து சர்வகலாசாலைக்கும் தங்களுக்கும் புகழ் தேடிக் கொண்டவர்கள் எல்லோருமே நாடறிந்த நாவலர்கள்.

ரைட் ஆனரபிள் வி. எஸ். சீனிவாச சாஸ்திரி, கூர்மா ரெட்டி, பேராசிரியர் எம். ரத்தினசாமி, டாக்டர் எஸ். ஜி. மணவாள ராமானுஜம், டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார், திவான் பகதூர் டி. எம். நாராயணசாமி பிள்ளை, ஓய்வுபெற்ற நீதிபதி வி. சுப்ரமண்யம் எல்லோரும் இந்தச் சர்வ கலாசாலை வளர்ச்சியில் தங்கள் சேவை என்ற முத்திரையைப் பதித்திருக்கிறார்கள். இப்போது உப அத்தியட்சகராக வீற்றிருப்பவர் டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் அவர்கள்.

முன்பே, 1954ம் ஆண்டில் அவர் இங்கு உப அத்தியட்சகராக இருந்திருக்கிறார். அப்போது காசி இந்து சர்வகலாசாலை உப அத்தியட்சகராகப் பதவியையும் அரசினர் அவரிடம் ஒப்படைத்ததால் அவர் தம் முழுக் கவனத்தையும் ஒரே இடத்தில் செலுத்த விரும்பிக் காசிக்குப் போனார். இப்போது மீண்டும் அண்ணாமலை சர்வ கலாசாலையிலேயே முழுப் பொறுப்பையும் ஏற்று நிர்வகிக்கின்றார்.

அண்ணாமலை சர்வ கலாசாலையில் என்னென்ன பாடங்கள் கற்பதற்கான வசதிகள் இருக்கின்றன என்று கேட்பதை விட என்னென்ன பாடங்களுக்கான வசதி இல்லை என்று கேட்பதும் சுலபம்; பதில் சொல்வதும் சுலபம்! ஏனென்றால் அப்படி ஏதும் பதில் சொல்வதற்கு இடமே இல்லை! எல்லா வகையான பாடங்களுமே இங்கு மாணவர்களுக்கு வசதியாகக் கற்றுக் கொடுக்கப்படுகின்றன.

விவசாயக் கல்வி கிடைக்கிறது. விஞ்ஞானக் கல்வியும் கிடைக்கிறது. பொறியியல் பாடங்களையும் படிக்கலாம். மனிதப் பண்பின் வளர்ச்சிக்கான பொதுக் கலைகளையும் படிக்கலாம். சங்கீதம் பயிலலாம். சங்க கால நூல்களை அக்கு வேறு ஆணி வேறாக ஆராய்ந்து படித்து வித்துவானாக மாறலாம். வணிகத் துறையில் பயிற்சி பெறலாம். வகுப்பு அறைகளுள் வாசாலமாய்ப் பேசி விவரிப்பதற்கான உபாத்தியாயர் பயிற்சியும் பெறலாம். ஒவ்வொன்றிற்கும் தனித்தனி இலாக்கா. தனித் தனித் தலைவர். எல்லோருக்கும் பொதுவாக ஒரு மத்திய நிர்வாகி (ரிஜிஸ்டிரார்).

சர்வகலாசாலை வட்டம் நவீன கட்டிடங்களுடனும் பரிசோதனை சாலைகளுடனும் ஒரு தனி நகரமாக விளங்குவதில் ஆச்சரியமில்லை. ஏறத்தாழ நாலாயிரம் மாணவர்களுக்கு வருங் காலத்தில் வாழ வழிகாட்டும் ஒரு ஸ்தாபனமல்லவா? மாணவர்களில் எண்பது சத விகிதத்துக்கு மேல் தங்கிப் படிக்க ஹாஸ்டல் வசதிகளை நல்ல முறையில் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மாணவிகளின் தொகையும் கணிசமாகவே இருக்கிறது. அவர்களுக்குத் தனி ஹாஸ்டல் வசதியுள்ளது.

சர்வ கலாசாலை வட்டத்தில் உள்ள ஒவ்வொரு பிரிவையும் பார்க்க ஆரம்பிக்குமுன் சர்வ கலாசாலை ரிஜிஸ்டிரார் அவர்களைச் சந்தித்து அநுமதி பெறப் போனபோது அவர் சிரித்துக் கொண்டே ''நான் ஒரிஜினல் மீனாட்சி சுந்தரம் இல்லை. டூப்ளிகேட்'' என்றார். புதிர் உடனடியாகப் புரியாதபோதிலும் சீக்கிரமே புரிந்தது. நிரந்தர ரிஜிஸ்திரார் மீனாட்சி சுந்தரம் ரஜாவில் போயிருப்பதை முன்னிட்டு, சென்னை அக்கவுண்ட்டண்ட் ஜெனரல் காரியாலயத்தைச் சேர்ந்த உயர் அதிகாரியான மற்றொரு மீனாட்சிசுந்தரம் இப்போது தற்காலிக ரிஜிஸ்டிராராகப் பணியாற்றுகிறார். அவர் எந்த விதமான 'ஆட்சேபணை'யையும் எழுப்பாமல் எங்கள் விருப்பத்தை ஆமோதித்து அனுப்பி வைத்தார்.

சர்வகலாசாலை வட்டத்துக்குள் எங்கள் சுற்றுலாவைச் சங்கீத கோஷத்துடன் ஆரம்பித்தோம். ஆம்! இசைக் கல்லூரி முதல்வர் திரு தண்டபாணி தேசிகர் தம் மாணவ மாணவிகளுக்கு இசைப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்த இன்பமான, இதமான சூழ்நிலையில் இசைக் கல்லூரிக்குள் நுழைந்தோம்.

(அடுத்த இதழில் முடியும்)

ராஜா ஸர்
அண்ணாமலை செட்டியார்



ராஜா ஸர்
முத்தையா செட்டியார்



ஸர் ஸி. பி.
ராமஸ்வாமி அய்யர்





# அல்லி

**க**டமையில் கருத்துக் கொண்ட போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டர் கண்ணனுக்குப் பல விதத்திலும் சோதனை ஏற்படுகிறது. அவன் அருமைத் தங்கையின் கணவன் ஒரு கொள்ளைக்காரன்; ஏன், அவன் காதலியே ஒரு திருடி. இந்தச் சோதனையில் தளர்ந்து விடாமல் உறுதியா யிருக்கிறான் கண்ணன்.

எல்லாக் கட்டங்களிலும் எஸ். எஸ். ராஜேந்திரனின் நடிப்பு மிகவும் நன்றாயிருக்கிறதென்றாலும், கடைசியில் கண்ணைக் கொடுத்த மாதரசியையே கைது செய்யும் சங்கடமான நிலைமையில் அவர் நடிப்பு துடிப்போடு விளங்குகிறது.

டைரக்ஷன் விஷயத்திலும் எஸ். எஸ். ராஜேந்திரன் குறை வைக்கவில்லை. கவனமாகத் தம் பொறுப்பை நிறைவேற்றி யிருக்கிறார்.

தமிழ்ப் படங்களில் காதல் தோன்றுவதே ஓர் அதிசயம்தான். சைக்கிளில் செல்லும் விஜயகுமாரிக்கும், நடந்து செல்லும் எஸ். எஸ். ஆருக்கும் ஒரு நொடியில் காதல் தோன்றி விடுகிறது. இதை வேறு மாதிரி புனைந்து சுவையாகச் செய்திருக்கலாம்.

விஜயகுமாரி இதில் 'நானும் ஒரு பெண்' என்று வரவில்லை! கைதேர்ந்த கள்ளியாக வந்து பல பொருள்களைக் கவருவதுபோலவே இன்ஸ்பெக்டர் கண்ணனின் உள்ளத்தைக் கவர்ந்து படம் பார்ப்பவர்களையும் கவர்ந்து விடுகிறார். இந்தப் படத்தில் நாகேஷுக்கு நல்ல சான்ஸ். வஞ்சனையில்லாமல் சிரிக்க வைக்கிறார். எவர்சில்வர் பாத்திரக்காரனாக வந்து வேட்டியின் சரிகைக் கரையைக் கத்திரித்துக்கொள்ளும் காட்சி ஒன்று போதும்!

சௌகார் ஜானகி இன்ஸ்பெக்டர் கண்ணனுக்குக் கண் கொடுத்ததோடு படத்துக்கும் கண்ணாய் விளங்குகிறார். வழக்கம்போல் காதலில் தோல்வியுற்றுக் கதறாமல், கணவனைப் பிரிந்து வாடாமல் சற்றுப் புது மாதிரியாகவே நடிக்கிறார். துளிக்கூடப் பதற்றம் இல்லாமல் அமைதியாக நடிப்பது நன்றாயிருக்கிறது.

புஷ்பலதா வந்து போகிறார்.

கதை, வசனம் எழுதியிருக்கும் நாகர்கோவில் கே. பத்மநாபன் கதையில் புதுமையைப் புகுத்த முயன்று ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறார்.

ஒளிப்பதிவுக் கலைஞர் சுந்தரபாபுவின் கைத் திறன் கருத்தைக் கவருகிறது. எஸ். எஸ். ராஜேந்திரனின் மனப் போராட்டத்தைப் பல கோணங்களில், பல உருவங்களில் படமாக்கிச் சிறப்பாகத் தம் கைவண்ணத்தைக் காட்டியிருக்கிறார். கொள்ளைக் கூட்டம் கல்யாணச் சந்தடியில் மின்சார மெயினை அணைத்துக் குழப்பம் விளைவித்துத் திருடிச் செல்வது பழைய கதை. கொஞ்சம் சிந்தித்துப் புதுமையாக மாற்றி யிருக்கலாம்.

விஜயகுமாரி கவுனுடன் தோன்றிக் குதிப்பதில் கலையும் இல்லை; கவர்ச்சியும் இல்லை. கத்திரித்து எறியவேண்டிய காட்சி.

கண்ணன் மனப் போராட்டத்தில் அவதியுறும்போது வசனம் பேசி விறுவிறுப்பைக் கெடுத்திருக்க வேண்டாம்.

பாடல்கள் ஆறும் ஆறுதல்கூட அளிக்கவில்லை! இதை விடத் துணிந்து, பாடல்களே இல்லாமல் ஒரு புரட்சி செய்திருக்கலாம்.

''ஏழை படும் பாடு'', ''நீதிக்குப்பின் பாசம்'' ஆகிய படங்களைப் பார்க்காதவர்கள் ''அல்லி''யை ரசிப்பார்கள். **-காந்தன்**



# கால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்ருகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் கிடைத்திருக்கும் நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிருர்கள்.

DC-8-23-TAM.

# காங்கிரஸின் கர்வபங்கம்

நான் தீவிர காங்கிரஸ்வாதி. இருப்பினும் சென்னைத் தேர்தல் முடிவுகளைக் காங்கிரசின் கர்வ பங்கம் என்றே எனக்கு வர்ணிக்கத் தோன்றுகிறது. சென்னைத் தேர்தல் எங்கள் பக்கம் வெற்றியில் முடியும் என இறுமாந்திருந்தோம். அண்மையில்தான் திரு டி.டி.கே. தலைநகரை "ஏ" பிரிவு நகரமாக்கிச் சலுகைகள் தந்தார். தி. மு. க. தனது திராவிட நாட்டுக் கொள்கையைக் கைவிட்டு, கொள்கைப் பிடிப்பற்ற கட்சி எனப் பெயரெடுத்திருந்தது. மேலும் நகராட்சி ஊழல்களை அம்பலப்படுத்துவதில் பெரியார் ராமசாமி முனைந்து பாடுபட்டு வந்தார். எல்லாவற்றையும்விடக் காங்கிரஸ் தலைவர், முன்னாள் முதலமைச்சர் திரு காமராசரும், மத்திய மந்திரி, சென்னை மந்திரிகளும் வீடு வீடாகச் சென்று தேர்தல் பிரசாரம் செய்து வாக்குறுதிகளையே அளித்தனர். கூட்டணி தவிர்த்த மற்ற எல்லாக் கட்சிகளும் மனமுவந்து காங்கிரசுக்கு ஆதரவு தந்தன. பண பலம், ஆள் பலம், ஆளும் கட்சியின் விசேட அதிகாரங்கள் இவை யாவும் எங்களிடம் இருந்தன. ஆனால் தலைமைப் பீடமும், ஏன், அகில இந்தியாவுமே ஆச்சரியப்படத்தக்க அளவுக்கு ராஜாஜி அவர்களின் சீரான தலைமையில் கூட்டணி வெற்றி பெற்று, நகராட்சியைக் கைப்பற்றியதுதான் எங்கள் எல்லோரையும், வியப்பிலும் துக்கத்திலும், அதே நேரம் தீவிர சிந்தனையிலும் பெரிதும் ஆழ்த்தியிருக்கிறது.

இதிலிருந்து, அகில இந்தியாவிலுமுள்ள காங்கிரஸ் ஆட்சியும் இறுமாப்பை அகற்றி, எல்லோருக்கும் நல்ல ஆட்சியை அளிப்பதற்குச் சங்கல்பம் செய்துகொள்ள வேண்டியது அவசியம் என்று தெரிகிறது.

நல்ல அரசியல் அறிவுள்ள சென்னை வாக்காளர்களின் தீர்ப்பிலிருந்து காங்கிரஸ் ஸ்தாபனம், அதன் ஆட்சியில் தந்துள்ள தங்கக் கட்டுப்பாடு, விலைவாசி உயர்வு, வரி விதிப்புகள், நில உச்சவரம்பு முதலான சட்டங்களிடம் மக்களுக்குத் தீராத வெறுப்பு தோன்றிவிட்டது என்று இப்போது தெளிவாகத் தெரிகிறது.

இ. க., கம்யூனிஸ்டு, த. தே. க. இன்னும் பலவும், தங்களுக்கு விளம்பரம் தேடிக் கொள்ளவே காங்கிரசை ஆதரித்தன. எங்கள் ஸ்தாபனமாகிய காங்கிரஸ் அதனது பெருமைக்குத் தானாகவே சிறுமை தேடிக் கொண்டது. பிரித்தாளும் முறையிலும், வர்க்க பேதம் உண்டாக்கும் முறையிலும் மேம்பட்ட பொதுவுடைமைக் கட்சியுடன் காங்கிரஸ் கூட்டணி அமைத்துக் கொண்டது தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டிகளின் ராஜதந்திரமாகும். ஆகவே, இத்தோல்வி குறித்துத் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி மிகவும் கவலையடைந்துள்ளது. இதைச் சொல்வதற்கு எனக்கு மிக வருத்தம்.

பழம் பெரும் தேசிய ஸ்தாபனமாகவும், ஆளும் கட்சியாகவும் இயங்கும் காங்கிரசுக்கு, சுயபலம் குறைந்து வருவதை நாம் கண்கூடாகக் காண முடிகிறது. அதன் சோஷலிசக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கும்படி நாங்கள் கட்டாயப்படுத்தப்படுகிறோம். கட்சி ஆணைப்படி நாங்கள், "ஆமாம், சாமி"களாக நிற்கிறோம். எனவே காங்கிரஸின் ஊழலைக் களைந்தெறியும் பான்மையில், எங்களது ஸ்தாபனத்தை ஒரு காலத்தில் பெரிதும் அலங்கரித்த பெருமகனார் ராஜாஜி பெற்ற வெற்றியை நாங்கள் வாழ்த்தவும் வணங்கவும் வரவேற்கவும் கடமைப்பட்டிருக்கிறோம். உண்மையை ஒத்துக் கொள்வது மிகவும் கசப்பாக இருக்கிறது. இருப்பினும் கைப்பு உடலுக்கு உறுதி தருவது என்பது தெளிவு.

காங்கிரஸுக்கு ஏற்பட்ட கர்வபங்கம் எங்கள் எல்லோரையும் காங்கிரசின் கொள்கைகளைக் குறித்துச் சிந்திக்க வைத்திருக்கிறது.

தூய்மை தேடி நல்லோர் அறிவுரைகளைக் கேட்டு ஆட்சி நடத்தும் அளவுக்குக் காங்கிரஸின் "கர்வபங்கம்" நடைபெற ராஜாஜி முயற்சி எடுத்து வென்றதற்காகக் காங்கிரஸ் ஸ்தாபனம் அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

திருப்பத்தூர்
இராமநாதபுரம்
27-2-64

**ஸ்ரீஸத்யம் ஸ்ரீநிவாஸன்**
அங்கத்தினர், தாலுகா
காங்கிரஸ் கமிட்டி

## 'மலையாளத்தை கொலை பண்ணாதீர்கள்'

சுடர் (2-2-64) படித்தேன். அதில் 'மாதர் உலக'த்தில் "தாலாட்டுப் பள்ளி" பற்றி சிலவற்றை கூற விரும்புகிறேன். மலையாளத் தாலாட்டுப் பாடல்கள் என்று சொல்லி அனுசுயா இரண்டு பாடல்களின் பாகங்களை எழுதியிருக்கிறாள். அந்தப் பாகங்களில் பல தப்புகள் வந்திருக்கின்றன. அதன் மூலம் அவற்றின் அர்த்தம் அர்த்தமில்லாமலாகிறது.

மலையாளம் தெரியாத நீங்கள் இந்த பாடல்களின் அர்த்தம் புரியாமல் மலையாளத்தை கொலை பண்ண முற்பட்டீர்களே!

திருவனந்தபுரம்
4-2-64

**பி. என். பாஸ்கரன் தம்பான்**

[எப்படி இக்கடிதத்தை எழுதியவர் தமக்குத் தமிழ் தெரியும் என்பதாகக் கூறிக்கொள்ளவில்லையோ, அதேபோல் தாலாட்டுப் பள்ளி என்ற கட்டுரையை எழுதிய அனுசுயாவும் தமக்கு மலையாளம் தெரியும் என்பதாகச் சொல்லிக் கொள்ளவில்லை. தாம் கேட்ட சில மலையாளத் தாலாட்டுப் பாடல்கள் தமக்கே தூக்கத்தை வருவித்துவிடும் அளவுக்கு ஒலி நயம் மிகுந்து இனிமையாக இருந்தன என்பதையே வலியுறுத்தியிருந்தார். —**ஆசிரியர்**]

## அதிக விலை ஏன்?

நமது தமிழ் நாட்டில் 8-1-64ம் தேதி முதல் அரிசி விலை நிர்ணய உத்தரவும் அரிசி கட்டாய சர்க்கார் லெவி கொள்முதல் உத்தரவும், மத்திய சர்க்கார் விருப்பத்திற்கிணங்க அமுல் நடத்தப்படுகிறது.

## வட்டமேஜை

நம் தமிழ் நாட்டில் இந்த வருஷம் பருவ மழை காலதாமதம், பின் பெருவெள்ளம், நீர் வயலில் தேங்குதல், புயல் முதலிய காரணங்களால் இந்த வருஷம் நெல் உற்பத்தி மிகவும் பாதிக்கப்பட்டு விட்டது.

நஷ்டத்திலுள்ள விவசாயிகள் ஒன்றரை மணங்கு நெல் மூட்டைக்கு விலை சராசரி ரூ. 22 முதல் ரூ. 23 வரை களத்திலேயே கேட்கிறார்கள். மதுரை நெல் பேட்டையில் நெல் மூட்டை (54 படி கொண்ட மூட்டை) ஒன்றுக்கு விலை 27 ரூபாய் வரை உயர்ந்திருக்கிறது. இவ்வளவு அதிக விலையில் கொள்முதல் செய்து சர்க்கார் நிர்ணய விலைக்கு மணங்கு ஒன்றுக்கு ரூ. 17 ஆக அரிசி 15 சத விகிதம் கொடுக்கும்படி ஆலைக்காரர்கள் கட்டாயப்படுத்தப்படும்போது, அவர்களுக்கு ஒரு மூட்டை அரிசி சர்க்காருக்கு விற்பதில் ரூ. 14 வரை நஷ்டம் ஆகிறது. இந்த நஷ்டத்தை ஈடு செய்துகொள்ள வெளி பொதுஜனங்களுக்கு விற்கும் பொது மார்க்கெட் விலை மிகவும் கூடுதலாகிறது. ஜனங்கள் அல்லல்படுகிறார்கள். அரிசி விலை உயர்வுக்கு வேண்டாத அபவாதத்தை அரிசி ஆலைக்காரர்கள் ஏற்கவேண்டி வருகிறது. அறுவடை ஆரம்ப காலத்திலேயே இப்படியிருந்தால் பின் அருந்தல் காலத்தில் நிலைமை எப்படி ஆகுமோ என்று பயப்பட வேண்டியிருக்கிறது.

முன்பு சர்க்கார் கொள்முதல் அமுலில் இருந்த 1959-ம் வருஷத்திலும், பழையபடி இஷ்டபூர்வ கொள்முதல் அமுலில் இருந்த 1963-ம் வருஷத்திலும் நாட்டில் இருந்த கஷ்ட நிலைமையை, கொள்முதல் அமுலில் இல்லாத வருஷங்களாகிய 1960 — 61 — 62 வருஷங்களில் நிலவிய சுமுக நிலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், கொள்முதல் திட்டத்தின் பலன் பொதுமக்களை எப்படிப் பாதிக்கிறது என்பது விளங்கும்.

நியாய விலைக் கடை என்பது பற்றாக்குறையைத் தீர்க்காது. சில நகரங்களில் உள்ள சில நியாய விலைக் கடைகளால் பொது மக்களுக்கு அவர்களது வாழ்க்கைக்குத் தேவையான அரிசியில் ஒரு பாகம் கூடக் கிடைப்பதில்லை என்பது நிதர்சன உண்மை. தவிர நியாய விலைக் கடைகளில் 'க்யூ'வில் நின்று சில படி அரிசி வாங்குவோர்களில் பலர் அதை ஒரு பிழைப்பாகக் கொண்டு உடனே அதிக விலைக்கு ஜனங்களுக்கு விற்பவர்களே.

கண்ட்ரோல்களை எடுத்து, கொள்முதல்களையும் நீக்கிவிட்டால் விவசாயிகளுக்கு நியாயமான விலை கிடைக்க ஏதுவுண்டு. வியாபாரிகளிடையேயும் போட்டி ஏற்பட்டுப் பொதுஜனங்களுக்கு அரிசி நியாய விலையில் கிடைக்க ஏதுவாகும்.

மதுரை — பி. இரத்தினசாமி நாடார்,
15—2—64 — தலைவர், மதுரை ரைஸ் அண்டு ஆயில் மில் ஓனர்ஸ் அசோஸியேஷன்.

## கோவில் திருப்பணி

மாமல்லர் சேனாதிபதியான பரஞ்சோதி வாதாபி மன்னர் புலிகேசியைத் தோல்வியுறச் செய்து அங்கிருந்த வாதாபி கணபதியைத் தனக்கெனக் கொண்டு வந்து திருச்செங்காட்டாங்குடியில் பிரதிஷ்டை செய்து அன்னதானம் வழங்கியதால் சிறுத்தொண்டர் என்று பெயர் பெற்ற விவரம் அனைவரும் அறிந்ததே. கணபதியால் பூஜிக்கப்பட்டதால் கணபதீசுவரம் என்றும் பெயர் பெற்ற திருச்செங்காட்டாங்குடி ஸ்ரீ உத்தராபதீசுவரர் சுவாமி தேவஸ்தான ராஜ கோபுரம் நூற்றைம்பது வருஷகாலமாகப் பழுதடைந்திருந்து தற்சமயம் ரூ. 2,30,000 செலவில் புனர் நிர்மாணம் செய்ய ஆரம்பித்துள்ளார்கள். இத் திருப்பணிக்குத் தேவஸ்தான நிதியிலிருந்து ரூபாய் ஒரு லட்சமும், திருப்புகலூர் ஸ்ரீ அக்னீசுவரஸ்வாமி தேவஸ்தான நிதியிலிருந்து ரூ. 50,000 மும் செலவு செய்யத் தீர்மானமாகியுள்ளது. பாக்கித் தொகை பொது மக்கள் நன்கொடை மூலம் வசூல் செய்து திருப்பணி செய்ய வேண்டியுள்ளதால் பொது மக்கள் தாராளமாக நன்கொடை வழங்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

திருச்செங்காட்டான்குடி — முத்துஸ்வாமி
17—2—64 — பொருளாளர்,
உத்திராபதீசுவரர் தேவஸ்தானம்

## உபரி வரி

சென்னை கனம் முதல் மந்திரி அவர்களை 29—2—64ல் தஞ்சை ஜில்லா நிலச்சுவான்தார்களில் சிலர் இவ்வருஷம் உயர்த்தியிருக்கிற நில வரியை (Enhanced Assessment) தள்ளுபடி செய்யும்படி கோருவதற்குச் சந்தித்தார்கள். அதற்குக் கனம் மந்திரியவர்கள் வரியை ஒத்திவைக்கக்கூடத் தயங்கினார்.

இவ்வருஷத்தில் தஞ்சை ஜில்லாவிலும், சுற்றுப்புறமுள்ள திருச்சி முதலிய பிராந்தியங்களிலும் ''அடை மழை'' காரணமா, நல் விளைவு முழுதும் பாதிக்கப்பட்டு, நீர்ச்சாவியாகிவிட்டது. எப்போதும் உள்ள நஞ்சை நில அயன் தீர்வையுடன், செஸ், சர்சார்ஜ், பஞ்சாயத்து யூனியன் வரி (இவைகள் ரூபாய் ஒன்றுக்கு சுமார் 72 பைசா) இவைகளை நிலச்சுவான்தார் சர்க்காருக்குக் கட்ட முடியாமல் இருக்கும்போது, சர்க்கார் உயர்த்தியிருக்கிற ''உபரி வரி'' ரூபாய்க்கு 45 பைசா வீதம் இரண்டு பசலிக்கு 90 நயா பைசாவும் சேர்த்துக் கட்ட முடியுமா? இது மட்டுமா? நிலச்சுவான்தார் பன்னிரண்டரை ஏக்கருக்கு மேல் வைத்துக் கொண்டிருந்தால் அந்த நிலத்துக்கு ஏக்கர் ஒன்றுக்கு சுமார் ரூ. 4-50க்குக் குறையாமல் விவசாய வருமான வரி கட்ட வேண்டும். அதுவும் தவிர, கிராமப் பஞ்சாயத்து விதிக்கும் ஏக்கருக்கு ஒன்றரை ரூபாய் வாய்க்கால் வெட்டு வரி கொடுக்க வேண்டும். மேலும் பஞ்சாயத்துப் போர்டு எல்லையில் எந்தக் காரியம் செய்தாலும் இந்த நிலச்சுவான் தலையில்தான் அந்த வரி விழுகிறது.

ஒரு சிறிய நிலச்சுவான்தார் இவ்வளவு வரிகளையும் கொடுத்து, தான் சாகுபடிக்கு வாங்கும் கடன்களையும், அதன் வட்டி வகையறாக்களையும் இந்தச் சாவியாகப் போன சமயத்தில் எப்படிச் செலுத்த முடியும்?

மன்னார்குடி தாலுக்கா
பேரம்பூர், — ஜி ராமமூர்த்தி ஐயர்
2—3—64

## பிரிட்டானியா வழங்குகின்ற மற்றொரு பாரேல்!

# பிரிட்டானியா
## பிஸ்கட்டுகள்





# அறிவுக் கனலில் அருட் புனலே!

ஆரம்பத்தில் கப்பல் வாழ்க்கை ஸ்வாமிஜிக்கு ஒத்து வராத ஒன்றாகத்தான் இருந்தது. கமண்டலுவையும், தண்டத்தையுமே அக்கடா என்று வீசி எறிந்து விட்டுக் காற்றாடி போலத் திரிய விரும்பிய பரிவிராஜகர் அவர். இப்போது அவருக்குப் பெட்டி, படுக்கை இவைகள் எல்லாம் சேர்ந்து விட்டன. 'பகவானின் லீலா விபூதிகள்தாம் எத்தனை விந்தையானவை?' என்றெண்ணி வியந்தார். 'அன்று வீட்டையும் வாசலையும் விட்டு ஆண்டியாக ஓடச் செய்த ஈசுவரனே இன்று நம்மை 'சந்நியாச சம்சாரி'யாக்கி யிருக்கிறான்! மக்களுக்காகத் தமது பூரண சந்நியாசத்துக்கும்கூட ஓரளவு சந்நியாசம் அளிக்க வேண்டியதுதான் போலும்!'

சக பிரயாணிகளிடம் நெருங்கிப் பழகி அந்தக் கப்பலையும் தம் இனிய இயல்பினால் இல்லமாக்கிக் கொண்டார் ஸ்வாமிஜி. பல தேசங்களையும், மதங்களையும் சேர்ந்த மக்கள் கொண்ட அந்தக் கப்பல் உலகுக்கே ஒரு 'மாதிரி'யாக இருந்தது. சர்வமத மகாசபைக்கு அதுவே ஒரு பூர்வாங்கமாகவும் அமைந்தது. கப்பல் நாயகர் தமது ஓய்வு வேளைகளில் ஸ்வாமிஜியுடன் உரையாடி, யந்திரங்களின் வேலை முறையை எல்லாம் அவருக்கு விவரித்தார்.

கப்பல் இலங்கை, சிங்கப்பூர், சைனா, ஜப்பான் வழியாக அமெரிக்காவின் மேற்குக் கடற்கரை நோக்கிச் சென்றது.

ஜப்பானில் யோகோஹாமாவிலிருந்து அவர் தமது அருமைச் சென்னை சிஷ்யர்களான அழகிய சிங்கர், டி. ஆர். பாலாஜி ராவ், ஜி. ஜி. நரஸிம்மாச்சாரியார் ஆகியோருக்கு எழுதியுள்ள அற்புதமான கடிதத்தில் பிரயாண விவரங்களை வெகு அழகாகக் கூறியிருக்கிறார். எழுபதாண்டுகளுக்கு முற்பட்ட சீனாவைப் பற்றி எவ்வளவு சுவாரஸ்யமாக எழுதுகிறார் பாருங்கள்!

''அடுத்தபடியாக ஹாங்காங். சீனாவுக்கு வந்து விட்டோம் என்ற உணர்வு ஏற்படுகிறது. தொழிலாளிகள் மயம். அவர்களுடைய கையில் இல்லாத தொழிலே இல்லை எனத் தோன்றுகிறது..... கப்பலுக்கு நங்கூரம் பாய்ச்சியவுடன் உங்களைக் கரைக்கு இட்டுச் செல்வதற்காக நூற்றுக்கணக்கான படகுகள் சுற்றி வந்து முற்றுகையிடுகின்றன. இரண்டு சுக்கான்கள் கொண்ட விசித்திரக் கலங்கள் இவை. படகோட்டி தன் குடும்பத்துடன் அதிலேயே வசிக்கிறான். அநேகமாக எப்போதுமே மனைவிதான் சுக்கான்களை இயக்குகிறாள்—ஒன்றைக் காலாலும், மற்றதைக் கையாலும். இவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர்களுடைய முதுகில் ஒரு குழந்தையைக் கட்டிக் கொண்டிருப்பதைக் காண்பீர்கள். குட்டி சீனனுடைய கைகளையும், கால்களையும் சுதந்திரமாக இயங்குமாறே தளர்த்தி விட்டுக் கட்டியிருப்பார்கள். தாயார்க்காரி தன் முழு பலத்தையும் காட்டிக் கலத்தை வலிக்கும் போதும், பெருத்த சுமைகளைத் தூக்கிச் செல்லும் போதும், அற்புதமான சுறுசுறுப்புடன் படகிலிருந்து படகாகக் குதித்துத் தாவிச் செல்லும் போதும் குட்டி சீனன் அவளுடைய தோளில் விச்ராந்தியாக ஊஞ்சலாடிக் கொண்டிருப்பதைக் காண ரொம்ப விநோதமா யிருக்கும். எப்போது பார்த்தாலும் சாதாரணப் படகுகளும் விசைப் படகுகளும் வருவதும் போவதுமாக ஒரே நெரிசலாக இருக்கிறது. எந்த நிமிஷமும் குட்டி சீனனுடைய சின்ன மண்டையும், அதிலுள்ள சிண்டும் எல்லாமும் நொறுங்கி விடும் ஆபத்து இருக்கிறது. ஆனால் அதற்காக அவன் லவலேசம்கூட லட்சியம் செய்வதில்லை. இந்தப் பரபரப்பு வாழ்க்கையில் அவனுக்கு சுவாரஸ்யம் எதுவும் இல்லை. அவனுடைய வேலை வெறிபிடித்த தாய் அவ்வப்போது கொடுக்கிறாளே, அந்த அரிசி அப்பத்தின் 'உடற்கூறு' என்ன என்று பிட்டுப்பிட்டு பார்ப்பதிலேயே அவன் திருப்தியாக இருக்கிறான்.'





சீன ஆலயங்களில் அந்நியரை அநுமதிப்பதில்லை என்று தெரிந்தும் ஸ்வாமிஜி பிடிவாதமாக ஓர் ஆலயத்தில் பிரவேசித்தார். அப்போது இரண்டு மூன்று சீனர்கள் கையில் குண்டாந்தடியுடன் அவரை நோக்கிப்பாய்ந்து வரவே அவருடன் வந்தவர்கள் ஓடி விட்டனர். மொழிபெயர்ப்பாளரும் ஓடத் தயாரானபோது ஸ்வாமிஜி அவருடைய கையைப் பிடித்து நிறுத்தினார். 'யோகியைச் சீன மொழியில் எப்படி அழைப்பது என்பதைக் கூறி விட்டு நீங்களும் ஓடலாம்' என்றார்.

அவரும் அவ்வாறே சொல்ல, ஸ்வாமிஜி தாம் இந்தியாவிலிருந்து வந்துள்ள ஒரு யோகி என்று சீன மொழியில் உரக்கக் கூவினார். என்ன ஆச்சரியம்! அடிக்க வந்த சீனர்கள் அவரது அடிபணிந்தார்களாம்.

பாரத ஞானிகளுக்கு வெளிநாடுகளில் அத்தனை மதிப்பு இருந்திருக்கிறது!

தங்களுக்கு மந்திரத் தாயத்துக்கள் வேணுமென்று அந்தச் சீனர்கள் ஸ்வாமிஜியைச் சூழ்ந்து கொண்டார்கள். யோகத்தைப் பற்றி அவர்கள் அறிந்தது அவ்வளவே! ஸ்வாமிஜி சற்று நேரம் யோசித்தார். பிறகு தமது சட்டைப் பையிலிருந்து ஒரு தாளை எடுத்துத் துண்டுகளாக்கினார். ஒவ்வொன்றிலும் 'ஓம்' என்று எழுதி அவற்றைச் சீனர்களுக்கு விநியோகித்தார். பிரணவத்தைவிட உயர்ந்த மந்திரம்தான் ஏது?

ஜப்பானைப் பற்றிச் சொற்சித்திரம் வடித்த ஸ்வாமிஜி 'ஜப்பானியரைப் பொறுத்த மட்டில் உயர்ந்த யாவற்றுக்கும், நல்லன யாவற்றுக்கும் இந்தியா இன்றும் ஓர் ஆதரிச தேசமாக விளங்குகிறது. ஆனால் உண்மையில் நாம் எப்படி இருக்கிறோம்?' எனக் கேட்கிறார்.

தொடர்ந்து மூட நம்பிக்கைகளும், உயர்வு தாழ்வு எண்ணமும், மேல்நாட்டு மோகமும், குமாஸ்தா உத்தியோகம் பெறுவதே பிறப்பெடுத்த லட்சியம் என்ற மனோபாவமும் கொண்ட இந்தியாவை இக் கடிதத்தில் தாக்குகிறார் ஸ்வாமிஜி:

''இந்தியாவுக்குக் குறைந்தபட்சம் ஓராயிரம் இளைஞர்களின் தியாகம் தேவையாக இருக்கிறது — மனித மனம் படைத்த இளைஞர்கள் தேவை. சுயநலமின்றி, லட்சியத்தை அடையும் வரை தங்கு தடையில்லாமல் செல்லக் கூடிய எத்தனை மனிதர்களை அளிக்க இன்று சென்னை தயாராக இருக்கிறது? ஏழைகளுக்கு அநுதாபம், அவர்களுடைய பசித்த வாய்க்குப் பிடி அன்னம், பாமர மக்களுக்கு அறிவொளி இவற்றை அளித்துப் புதியதொரு அமைப்பை உருவாக்குவதற்காகச் சாவு வரை போரிடக்கூடிய எத்தனை மனிதர்களைச் சென்னை வழங்கும்? உங்கள் முந்தையரின் கொடுமை காரணமாக விலங்குகளின் நிலைக்கு வந்து விட்டவர்களை மனிதர்களாக்குவதற்காகச் சாவு வரை போராடக் கூடிய எவ்வளவு பேரைச் சென்னை அளிக்கும்?'' என வினவுகிறார்.

பழைய உலகிலிருந்து புது உலகை நோக்கிக் கப்பல் சென்று கொண்டிருந்தது.

யோகோஹாமாவிலிருந்து புறப்பட்ட ஸ்வாமிஜி அமெரிக்கக் கண்டத்திலுள்ள வான்கூவரில் வந்திறங்கி விட்டார். தமது நம்பிக்கைகளின் நிலைக்களனான நவீன உலகில் வந்திறங்கிவிட்டார்.

வான்கூவரிலிருந்து கனடா வழியாகச் சிகாகோவுக்கு ரயிலில் பிரயாணம் செய்தார் ஸ்வாமிஜி.

ஓர் ஊரிலிருந்து இன்னோர் ஊருக்குச் சென்றாலே புதுமைகள் பலவற்றைக் காண்கிறோம். ஓர் உலகிலிருந்து இன்னோர் உலகுக்குச் சென்றால் எப்படி இருக்கும்? அதிசயங்களைத் தொடர்ந்து அதிசயமாகக் கண்டவாறு சென்று கொண்டிருந்தார் ஸ்வாமிஜி. திருவிழாக் கூட்டத்தில் தனித்து விடப்பட்ட குழந்தையின் மன நிலையில், சிகாகோவில் —

சர்வமத மகாசபை நிகழ விருந்த பெரு நகரில் — வந்திறங்கினார். சிகாகோ ஸ்டேஷனில் அவர் இறங்கியவுடனேயே இதுகாறும் அவர் நம்பிக்கைகளின் நிலைக்களனாக நின்றிருந்த அமெரிக்கா அவரை ஏமாற்றத் தொடங்கியது.

கனம் தூக்கிகள் கேட்ட கூலி அவரையே தூக்கிப் போட்டது. வாழ்க்கைச் செலவு இவ்வளவு உயர்வான நாட்டில் தாம்கொண்டு வந்துள்ள திரவியம் எவ்வளவு காலத்துக்குப் போதுமானதாயிருக்கும் என்று அப்போதே அவர் கணக்குப் போட வேண்டியதாயிற்று. ரயில் நிலையத்திலிருந்த சிறுவர்கள் அவரது காஷாய அங்கியையும் தலைப்பாகையையும் கண்டு கேலி செய்தபடி பின்தொடர்ந்தனர். இந்தக் கருப்பு நிற அந்நியனை அந்த 'நாகரிகவாசி'கள் ஏதோ இழிய ஜந்துவைக் காண்பது போலவே நோக்கினர்.

ஹோட்டல் ஒன்றில் அறை அமர்த்திக் கொண்டார் ஸ்வாமிஜி. கனம் தூக்கிகள் சென்ற பின்பு தமது உடைமைகளுக்கு நடுவே அமர்ந்து கொண்டு மனத்தைச் சுதாகரித்துக் கொள்ள முயன்றார். 'எல்லாமே அந்நியமாக உள்ள இங்கு தாம் தொடர்ந்து என்ன செய்யப் போகிறோம்? இங்குள்ளவர்களுக்குத் தாம் கூறவிருந்த உபதேசம் எட்டுமா? அவசரப்பட்டு இப்படி எங்கிருந்தோ எங்கோ வந்து விட்டோமோ?'' என்று கலங்கினார்.

மறு நாள், சிகாகோவில் நடந்து கொண்டிருந்த உலகக் கண்காட்சிக்குச் சென்றார் ஸ்வாமிஜி. இந்தக் கண் காட்சியின் ஓர் அங்கமாகத்தான் சர்வமத மகாசபை நடைபெற விருந்தது. உலகக் கண்காட்சி பிரம்மாண்டமான அளவில் அமைந்திருந்தது. ஏராளமானவர்கள் இதற்கு வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு துளியாகக் கரைந்தார் ஸ்வாமிஜி. ஆனால் இனி காணப் போகிறோம்: பாலில் விழும் ஒரு தயிர்த் துளி போல, தாம் அவர்களாக ஆகாமல் அவர்களை யெல்லாம் தம்மவர் ஆக்குபவராகக் கலந்தார்—என்று. இதுவரை அவர் கண்ட அதிசயங்களெல்லாம் அதிசயங்கள் அல்ல என்று அவரை எண்ணச் செய்தது உலகக் கண்காட்சி. அமெரிக்காவில் விஞ்ஞானமும், தொழில் நுட்ப அறிவும் கண்டிருந்த விந்தைகளை யெல்லாம் அது தேக்கித் தந்தது. 'எத்தனை இயந்திரங்கள்! எத்தனை எத்தனை நூதனப் பண்டங்கள்! மனிதனின் இகவுலக வாழ்க்கை வசதியாக இருப்பதற்காக இந்த அமெரிக்கர்கள் என்னென்ன சாதனங்களை யெல்லாம் கண்டு பிடித்திருக்கிறார்கள்! இதை யெல்லாம் நம் ஏழை இந்திய மக்கள் பெறப் போவது எப்போது?'

அடிக்கடி அந்த அற்புதக் கண் காட்சிக்குச் சென்று வந்தார் ஸ்வாமிஜி. முதலில் அற்புதமாகத் தம் உணர்வைக் கவர்ந்தவற்றின் நுட்பங்களை மெல்ல மெல்ல அறிவினால் புரிந்து கொண்டு விஞ்ஞான மர்மங்கள் பலவற்றைக் கற்றார். சிறுகச் சிறுகச் சில மக்களிடம் பரிசயமும் கொண்டார்.

ஸ்வாமிஜி பத்திரிகைப் பிராபல்யம் அடைந்தது மிகவும் வேடிக்கையான முறையிலாகும். அப்போது கபூர்த்தலா சம்ஸ்தானாதிபதி சிகாகோவில் இருந்தார். ஸ்வாமிஜி அவரைக் கண் காட்சி மைதானத்தில் கண்ட போது இந்தப் பக்கிரியுடன் என்ன பேச்சு என்று அவர் உதாசீனமாகவே இருந்தாராம். தகத்தால் சித்திரம் எழுதும் மராட்டிய பிராமணன் ஒருவனும் எப்படியோ சிகாகோவுக்கு வந்து உலகக் கண் காட்சியில் ஒரு கடை வைத்திருந்தான். இவனையும் மகாராஜா அலட்சியப்படுத்தி விருந்தார் போல் இருக்கிறது. அவன் அமெரிக்கப் பத்திரிகை நிருபர்களிடம் மகாராஜாவைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமாகக் கதை அளந்தான். அவலைக் கிண்டுகிற விஷயங்களை வெளியிடுவதில் அமெரிக்கப் பத்திரிகைகள் பெயர் போனவை. அமெரிக்காவோ அதன் உள்ளூர்ப் பத்திரிகைகளுக்குப் பெயர் போனது. அங்கு ஒவ்வோர் ஊரிலும் ஒரு பத்திரிகை இருக்கும். நிருபரின் சரட்டுக்கும் புரட்டுக்கும் இவற்றில் பஞ்சமே இராது. மராட்டிய பிராமணன் சொன்னதற்கும் மேல் இல்லாததையும்பொல்லாததையும் கூட்டி எழுதச் சிகாகோ பத்திரிகை நிருபர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் அவர்களிடம் விவேகானந்தர் மாட்டிக் கொண்டார். அவ்வளவுதான்! இந்தியாவிலிருந்து ஒரு ஞானி வந்திருப்பதாக அவரைப் பற்றிக் கூறப் புகுந்த அந்தப் பத்திரிகையாளர்கள், மராட்டிய பிராமணன் கூறியதவ்வளவையும் விவேகானந்தர் சொன்னதாகத் தங்கள் பத்திரிகைகளில் பத்திப் பத்தியாகப் பிரசுரித்தனர்! அதன்பின் சிகாகோவில் மகாராஜாவின் செல்வாக்கே அஸ்தமித்து விட்டதாம்!

எப்படியோ ஸ்வாமிஜி எத்தர்களான அமெரிக்க நிருபர்களிடம் சிக்கி விட்டார்! அவர்கள் அவரைக் கேள்விமாரியால் துளைத்து எடுப்பார்கள். ஸ்வாமிஜியும் சூழலுக்குப் பழக்கப்பட்டு வரலானார். மாறி மாறி வரும் உணர்ச்சிகளுக்கிடையேயும், ஆண்டவன் தமக்கு எப்படியோ வழி காட்டுவான் என நம்பினார். 'ஒரு சிரேஷ்டமான காரியத்தைச் செய்யத்தானே நான் நாடு கடந்து இங்கு வந்திருக்கிறேன்? அது பலிதமாகாது போகுமா?' என்று தெளிவு பெறத் தொடங்கினார்.

சர்வ மத மகாசபை குறித்து விவரங்கள் கேட்க அவர் தகவல் அறிவிப்பு நிலையத்துக்குப் போன போது; தெளிந்த உள்ளம் மீண்டும் கலங்க நேர்ந்தது.

மகாசபை தள்ளிப் போடப்பட்டிருப்பதாகவும் செப்டம்பர் முதல் வாரத்தில்தான் அது கூடும் என்றும் அறிந்தது முதல் அதிர்ச்சி. ஸ்வாமிஜி அமெரிக்காவை அடைந்தது ஜூலை மத்தியில். இன்னும் இரண்டு மாதங்களுக்கு இந்தக் குபேர நாட்டில் காலம் தள்ளுவதென்றால் அதற்குக் கையிருப்பு?

இரண்டாவது அதிர்ச்சி அவர் எந்த ஒரு ஸ்தாபனத்தின் சார்பிலும் வரவில்லை யென்பதும், நற்சான்றிதழ் ஏதும் பெற்று வரவில்லை என்பதுமாகும். இப்படிப்பட்டவர்களை சர்வ மத மகாசபையில் அனுமதிக்க இடமில்லை என்று சொல்லி விட்டார்கள். ஸ்வாமிஜிக்

# சிக்கனத்திலேயே சிங்காரம்



ஆம், அதிகமாகச் செலவிடாமலேயே உங்கள் ஆடை அலமாரியை அற்புதமாக நிரப்பிக்கொள்ளலாம். எந்தப் பெண்ணும் எளிதில் வாங்கக்கூடிய விதத்தில் கட்டாவ் வாயில் எழில் வாய்ந்த சேகரமாக வருகிறது. அவை உன்னதமானவை. காலையில் அணிவதற்கேற்ப இலேசானவை. தெளிந்த நிறங்களுக்கேற்ற நாகரீக போக்குடன் அமைந்தவை. கோலாகலமான மாலையில் உடுப்பதற்கேற்ப ஆழ்ந்த வண்ணத்தில் பொன்போன்ற மினுமினுப்புடன் கூடியவை.





ஒவ்வொரு மீட்டர் அளவிலும் 'கட்டாவ் மீல்' என்ற வார்த்தைகளைக் கவனித்து வாங்கவும்

எந்நேரத்திலும்...
எவ்விடத்திலும்...
எச்சந்தர்ப்பத்திலும்...

உங்கள் எழில் மேம்படக் காண்கிறீர்கள்

# கட்டாவ்

வாயில்களினால்

தி கட்டாவ் மகன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கோ. லிட்.

தலைமை ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பலார்டு எஸ்டேட், பம்பாய்-1
மில்கள்: ஹெயின்ஸ் ரோடு, பைகுல்லா, பம்பாய்-27
மொத்த விற்பனை நிலையம்:
கோவிந்த் சவுக், முல்ஜி ஜேதா மார்க்கெட், பம்பாய்-2

சில்லரை விற்பனை நிலையம்
216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு: சென்னை -1

வெற்றிக்கு விரதமேற்றுக் கொள்ளுங்கள்-
உற்பத்தியைப் பெருக்குங்கள்-சேமிப்பை பெருக்குங்கள்

SISTA'S Kms - 328 R

# பனாமா

## ஸேப்டி
## ரேஸர்
## ப்ளேட்கள்

அதி சுத்தமான, வழவழப்பான
க்ஷவரத்திற்கு



நாடெங்கணும் லட்சக்கணக்கான மக்கள் பனாமாவை உபயோகிக்கிறார்கள். அது வழவழப்பான, சுகமான க்ஷவரத்திற்கான சிறந்த ஸேப்டி ரேஸர் ப்ளேட். உங்கள் பணத்திற்கு அதிக மதிப்பைப் பெற பனாமாவிற்கு மாற்றிக் கொள்ளுங்கள்.




**பனாமா**

ஸேப்டி ரேஸர் ப்ளேட்




S2/PNA-18 TAM

குத் தம் காலடியே இருந்த பூமியே நழுவுவது போலத் தோன்றியது. ஆயிரம் பதினாயிரம் மைல்கள் கடந்து தாம் அமெரிக்கா வந்தது வியர்த்தமா? அந்தச் சென்னை நகரத்து இளம் பிள்ளைகள் முன்யோசனை யில்லாமல் செய்த காரியத்துக்கு இப்படி ஆனாலுமே என்று அவருக்குக் கோபம் கோபமாக வந்தது.

'இந்தியாவுக்குத் திரும்பிவிட வேண்டியது தானா?' என்ற வினா ஸ்வாமிஜியின் உள்ளத்தில் எழுந்தது. 'இதென்ன அசட்டுத்தனம்! ஆண்டவனிடம் நமக்கு நம்பிக்கை இல்லையா? பொருள் தேவைப்பட்டால் சென்னைக்கு எழுதினால் போயிற்று. மகாசபை கூடும் வரை இங்கேயே இருந்து அதனில் கலந்து கொள்ள அநுமதி கிடைக்குமா என்று பார்த்தே விடுவது!' என்று நிர்மானித்துக் கொண்டார் ஸ்வாமிஜி.

சிகாகோவைவிட போஸ்டனில் வாழ்க்கைச் செலவு குறைவாக இருக்கும் என்பதனால் ஸ்வாமிஜி போஸ்டனுக்குப் புறப்பட்டார். போகும் வழியிலேயே ஆண்டவன் தன் இன்னருள் அருளை அவருக்களித்தான்.

போஸ்டனுக்கு அருகேயுள்ள மெட்காஃப் கிராமத்தைச் சேர்ந்த மிஸ் கேட் ஸன்பார்ன் என்பவள் ஸ்வாமிஜி சென்ற ரயில் பெட்டியிலேயே உடன் வந்தாள். ஸ்வாமிஜியின் தோற்றத்தாலேயே அவரிடம் மதிப்புக் கொண்ட மிஸ் கேட் அவருடன் பேசப் பேச அவரது பெருமையை மேன்மேலும் உணர்ந்தாள். அவர் உத்தேசித்திருந்த திருப்பணியை வரவேற்றாள். ''ஸ்வாமிஜி! தாங்கள் எனது இல்லத்திலேயே வந்து தங்கியிருக்க வேணும்; உங்களுக்குச் சாதகமாகவே சந்தர்ப்பம் மாறும்'' என்றாள் அவள்.

ஸ்வாமிஜி அந்த அன்பான அழைப்புக்கு இணங்கினார். மெட்காஃப் கிராமத்திலிருந்த 'இளங்காற்றுப் புல்வெளி' (Breezy Meadows) என்ற ரம்மியமான இல்லத்தில் மிஸ் கேட்டின் விருந்தினராகத் தங்கினார். அப்போதைக்குச் செலவு என்பதே அவருக்கில்லை.

எழுத்துத் தொழில், போதனைத் தொழில் இரண்டாலும் மிஸ் கேட் ஓர் ஆசிரியையாவாள். ஐம்பத்து நாலாவது வயதிலும் ஊக்கத்துடன் தொழில் புரிந்து வந்த அவளுக்கு ஏராளமான நண்பர்கள் உண்டு. தன் நண்பர்களை யெல்லாம் அழைத்து வந்து இந்தியாவைச் சேர்ந்த 'அதிசய வஸ்து' வைக் காட்டி வந்தாள். ஸ்வாமிஜிக்கு ஆரம்ப காலத்தில் இது கூச்சமாகத்தான் இருந்தது. அவர்கள் ஹிந்து மதத்தைப் பற்றிக் கொண்டிருந்த தப்பபிப்பிராயங்களின்மீது அவரைக் கேள்விகள் கேட்டபோது அவர் ஆரம்பத்தில் சங்கடப்பட்டுப் போனார். பிற்பாடுதான் தமது பழக்கமான இனிமையையும் துணிவையும் பெற்று நயமாகவும் பயமாகவும் விடைகள் கூறலானார்:

சுவாமிஜி மெட்காஃபில் தங்கியிருந்ததைப் பற்றி 'இந்திய ராஜாவான ஸ்வாமி விவேகாநந்தர் மிஸ் ஸன்பார்னுடன், குதிரைச் சவாரி செய்தார்' என்பது போன்ற அதிசயத்

---

# நாட்டின் தலைவராக நூறு நாட்கள்

அமெரிக்காவில் இது தேர்தல் வருஷம். லிண்டன் பி. ஜான்ஸன் மறுமுறையும் ஜனாதிபதியாவாரா என்பது அமெரிக்க மக்களைப் பொறுத்த விஷயம் என்றாலும் கென்னடி இறந்த பிறகு வாஷிங்டனில் கூடிய முதல் பாராளுமன்றக் கூட்டத்தில் (காங்கிரஸ்) எடுத்த எடுப்பிலேயே, ''இன்றைக்கு உங்கள் முன்னால் உங்கள் ஜனாதிபதியாக நிற்காமலிருப்பது சாத்தியமாகி இருக்கக்கூடுமானால் அதற்காக என் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தியாகம் செய்திருப்பேன்'' என்று மெய்யன்போடு உள்ளமுருகக் கூறிய ஜான்ஸன் மறுகணமே அமெரிக்க மக்களின் அபிமானத்தைப் பெற்று விட்டார். அவர் ஜனாதிபதி பதவி ஏற்று, சென்ற பிப்ரவரி மாத இறுதியுடன் நூறு நாட்களாகின்றன.



டெக்ஸாஸில் ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்த ஜான்ஸன் ரூஸ்வெல்டினால் கண்டெடுக்கப்பட்டு வாஷிங்டனுக்கு அழைத்து வரப்பட்டவர். 1960-ல் டெமொகிராடிக் கட்சியால் ஜனாதிபதி தேர்தலுக்குத் தாம் நியமிக்கப் படவேண்டுமென்பதற்காகக் கென்னடியுடன் போட்டியிட்டார். ஆனால் டெமொகிராடிக் கட்சியினர் கென்னடியையே தேர்ந்தெடுத்த பிறகு பொதுத் தேர்தலில் கென்னடிக்காக உழைத்தார். துணை ஜனாதிபதியாகவுமானார். ஜான்ஸன் தாம் யார் என்பதை ரத்தினச் சுருக்கமாகப் பொருள் பொதிந்த எளிய சொற்களில் இப்படிக் கூறுகிறார்: ''முதலில் நான் ஒரு சுதந்திர மனிதன், இரண்டாவதாக நான் ஒரு அமெரிக்கன், மூன்றாவதாக நான் ஒரு டெமொகிராடிக் கட்சிக்காரன்.''

நகைக்கவே உள்ளூர்ப் பத்திரிகைகள் வெளியிட்டன!

பெண் குற்றவாளிகளைக் கண்ணியமான முறையில் நல்வழிப்படுத்தும் 'ஷெர்பார்ன் ரெஃபார்மேடரி'யைப் பார்வையிட்ட ஸ்வாமிஜி, தாய்நாட்டில் காருண்யம் என்பதையே காணாது வாழும் கோடானு கோடி ஏழை மக்களை எண்ணி விழிநீர் சாய்த்தார்.

இதைக் குறிப்பிட்டு அழஸிங்கருக்கு ஸ்வாமிஜி எழுதுகிறார்:

'ஏழைகளுக்காக உருகுங்கள்; உதவிபுரிய விழையுங்கள் — விருப்பமுண்டாயின் வசதி தன்னால் வரும். இந்தச் சுமையை என் இதயத்திலும், இந்த எண்ணத்தையே என் அறிவிலும் சுமந்து கொண்டு கடந்த பன்னிரண்டாண்டுகளாக நான் சுற்றி அலைந்திருக்கிறேன்....உதவியைப் பெறுவதற்காகவே உதிரம் கொட்டும் இதயத்துடன் உலகில் ஒரு பாதியைக் கடந்து இந்தப் புதுமையான நாட்டுக்கு வந்திருக்கிறேன். ஆண்டவன் பெரியவன். அவன் எனக்கு உதவுவான் என்று நான் நம்புகிறேன். ஆனால் ஒருகால் நான் இங்கேயே பனியிலோ பசியிலோ மடிந்து போகக் கூடும். அப்படி நான் மாண்டாலும், இளைஞர்காள், ஏழையரிடமும் அறியாதவரிடமும் தாழ்த்தப்பட்டவரிடமும் அநுதாபத்தையும் அவர்களுக்காகப் போராடும் பாவனையையும் என் சொத்தாக உங்களுக்கு விட்டுச் செல்கிறேன். இப்போதே, இந்நிமிஷமே, பார்த்தசாரதிப் பெருமானின் திருக்கோயிலுக்குச் செல்லுங்கள்! ஏழையரான கோகுலத்து இடைப் பிள்ளைகளுக்கு உற்ற நண்பனாக இருந்த அவனது திரு முன்னால், வேட்டுவனான குகனைக் கட்டியணைக்கத் தயங்காத அவனுடைய திரு முன்னால், புத்தராக அவதரித்த போது மேன்மக்களின் அழைப்புக்களுக்கும் மேலாகத் தாஸி ஒருத்தியின் அழைப்பை மதித்து அவளிடம் சென்று அவளை உய்வித்தவனின் திருமுன்னால்விழுந்து தண்டனிடுங்கள். ஆண்டவனின் சந்நிதியில் ஒரு மகத்தான தியாகம் செய்யுங்கள் — ஏழைகளுக்காக உங்கள் வாழ்க்கையையே தியாகம் செய்யுங்கள். இந்த ஏழைகளுக்காகத்தானே இறைவன் மீண்டும் மீண்டும் இந்த உலகுக்கு வருகிறான்? இவர்களைத்தானே அவன் எல்லாவற்றுக்கும் மேலாக நேசிக்கிறான்? அப்படிப் பட்டவர்களை மீட்பது ஒரு நாள் காரியமல்ல. வழி நெடுகிலும் உயிராபத்தான புதர்கள் மண்டியுள்ளன. ஆனால் பார்த்தசாரதி நம்முடைய சாரதியாகவும் இருக்கச் சித்தமாக உள்ளான். அவனிடம் சாசுவதமான நம்பிக்கை கொண்டு அவனுடைய திருநாமத்தை ஆணையிட்டுத் துயர மலைக்குத் தீ மூட்டுங்கள்! நம்பிக்கை, அநுதாபம் — ஜொலிக்கும் நம்பிக்கை, ஜொலிக்கும் அநுதாபம்! இவை இருந்தால் சுய வாழ்க்கை பொருட்டல்ல, சாவு பொருட்டல்ல, பசி பொருட்டல்ல, பனி பொருட்டல்ல. ஆண்டவனுக்கு ஜய கோஷம் செய்து முன்னேறுங்கள்! ஆண்டவனே நமது சேநாபதி. யார் வீழ்கிறார்கள் என்று திரும்பிப் பாராமல் முன்னே முன்னே சென்று கொண்டே இருங்கள்......ஒருவன் வீழ்ந்தால் இன்னொருவன் அப்பணியை எடுத்துக் கொள்வான்!''

அன்னிஸ்க்வாமில் பேராசிரியர் ரைட்டின் விருந்தாளியாகத் தங்கினார் ஸ்வாமிஜி.

சர்வ மத மகாசபையில் கலந்துகொள்ளத் தமக்கு வாய்ப்பே இராது என்று ஸ்வாமிஜி எண்ணி, அந்த ஆசையைக் கைவிட நினைத்த தருணத்தில் இறைவனின் இரு அருள் ரைட்டின் தோழமையைக் கூட்டி வைத்தது. ஸ்வாமிஜி சமய மகாநாட்டில் கலந்து கொண்டேயாக வேண்டும் என்று வற்புறுத்தினார் ரைட். ஸ்வாமிஜி தாம் எந்த ஸ்தாபனத்தின் ஆதரவிலும் வரவில்லை என்றும், நற்சான்றிதழ் பெற்று வரவில்லை என்றும் கூறினார்.

''ஸ்வாமிஜி, உங்களிடம் சான்றுகள் கேட்பது சூரியனிடம் அவன் ஒளி வீசுவதற்கு உரிமை பெற்றிருக்கிறானா என்று கேட்பது போல இருக்கிறது'' என்றார் பேராசிரியர் ரைட். ''சர்வ மத மகாசபையில் தாங்கள் பங்கு கொள்வதற்கு என்னாலியன்ற அவ்வளவையும் செய்கிறேன்'' என்றும் உறுதி கூறினார்.

பிரதிநிதிகளைத் தேர்வு செய்யும் குழுவின் அக்கிராஸனரே ரைட்டுக்குத் தெரிந்தவர் தான். அவருக்கு உடனே ஒரு கடிதம் எழுதினார். ''கற்றறிந்த நமது பேராசிரியர்கள் எல்லோரும் சேர்ந்து அறிந்திருப்பதை விட அதிகமாகக் கற்றறிந்துள்ள ஒரு வியக்தி இதோ இருக்கிறார்'' என்று அந்தக் கடிதத்தில் எழுதினார். ஸ்வாமிஜி சிகாகோவுக்குச் செல்வதற்கான டிக்கட் கட்டணத்தையும் பேரன்போடு உதவினார் ரைட். ஸ்வாமிஜி உள்ளம் கரைந்தார்.

ஸ்ரீமதி ரைட் அவளுடைய தாயாருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் ''காலக் கணக்கில் அவருக்கு (ஸ்வாமிஜிக்கு) முப்பது வயதிருக்கும். பண்பில் யுக யுகாந்தரமானவர்....'' என்கிறாள். அவளது ஒரு கட்டுரையிலிருந்து கருணைமயமான ஸ்வாமிஜி எவ்வளவு கோபாவேசமாகவும் இருக்க முடியும் என்பது தெரிகிறது. ஆங்கிலேயர்கள் இந்திய நாகரிகத்தைச் சிதைத்ததை எண்ணி ஒரு நாள் கனலாகக் கனன்று எழுந்த ஸ்வாமிஜி, 'ஆண்டவன் அவர்கள் மேல் நிச்சயம் வஞ்சம் தீர்த்துக் கொள்வான்' என்றாராம். அதோடு 'பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுச் சென்ற பின் இந்தியாவுக்குச் சீனாவால் ஒரு பேராபத்து நிகழும்' என்றும் ஸ்வாமிஜி கூறியதாக ஆறாண்டுக்கு முன் வெளியான 'அமெரிக்காவில் ஸ்வாமி விவேகானந்தர்: புது விவரங்கள்' (Swami Vivekananda in America: New Discoveries) என்ற நூலில் மேரி லூயி பர்க் கூறியுள்ளார்.

ஸ்வாமிஜியின் தீர்க்க தரிசனத்துக்கு இதை விட என்ன அத்தாட்சி வேண்டும்?

ஆங்கிலேயரின் பரதேச்சாதிகாரத்தை எண்ணி ஸ்வாமிஜியின் தேசபக்தி எப்படிப் பொங்கி எழுந்தது என்பதையும் ஸ்ரீமதி ரைட் கூறுகிறார்.

---

**ஆங்கிலேய அரசாங்கம் தம்மைக் கைது செய்து சுட்டுக் கொல்லாதா என்றுகூட அவர்**

நங்கையர் மேனி நலம்பெற்று மிளிர...

கோகுல் **ஸான்டால்** டாய்லெட் பவுடர்

•

கோகுல் **ஸான்டல்வுட்** டாய்லெட் பவுடர்

•

கோகுல் **ப்யூடி பவுடர்**

•

கோகுல் **டர்மரால் சோப்**



டி. எஸ். ஆர் & கோ

மதராஸ்

&

கும்பகோணம்









ஒரு பெரு விருப்பத்தைப் பல முறை வெளியிட்டாராம்; 'அப்படிச் செய்தால் அதுவே அவர்களது சபைப் பெட்டியின் முதல் ஆணியாக அமையுமே' என்பார் அவர். சோர்ந்திருந்த பாரத மக்களை வீறு கொண்டு எழச் செய்யும் ஒரு சம்பவம் நிகழ வேண்டுமென்று கருதிய ஸ்வாமிஜி அதற்காகத் தமது பிராணனையும் தியாகம் செய்து அப்படி ஒரு சம்பவம் ஏற்பட ஆசைப்பட்டிருக்கிறார்.

ஸேலம் என்ற நகரில் வசித்த ஸ்ரீமதி கேட் டான்னட் வுட்ஸ் என்ற அம்மையாரின் விருந்தாளியாக ஒரு வாரம் தங்கினார் ஸ்வாமிஜி. அவளும், அவளது புதல்வரும் ஸ்வாமிஜியிடம் எவ்வளவு பிரியம் கொண்டிருந்தனரோ அவ்வளவுக்கு வெறுப்பைக் காட்டினராம் அந்த ஊர்ப் பாதிரிமார்கள். காரணம், ஹிந்துக்களுக்கு மத மாற்றம் தேவையில்லை என்று ஸ்வாமிஜி அடித்துக் கூறத் தொடங்கி விட்டார். ஸ்வாமிஜி அந்நாள் கிறிஸ்துவ மிஷனரிகளின் பொய்ப் பிரசாரத்தைச் சின்ன பின்னப்படுத்தியதற்கு வஞ்சம்தீர்த்துக்கொள்வதுபோல் ஸேலம் பத்திரிகைகள் அவர் பெயரைச் சின்னபின்னப்படுத்தின. 'ஸ்வாமி விவேகனேண்டா' என்றும், 'விவே க்போண்டா' என்றும் 'ராஜா ஸ்வாமி விவி கனேண்டா' என்றும், 'விவிரானந்தா' என்றும் பலபடியாகக் குறிப்பிட்டன. இதன் பின்னரும் பல அமெரிக்கப் பத்திரிகைகள் ஸ்வாமிஜியின் பெயரை ஒரு சஹஸ்ரநாமமாகவே திரித்து வெளியிட்டிருப்பதைப் பார்க்க மிகவும் ஹாஸ்யமாயிருக்கும்.

1893ம் ஆண்டு ஸெப்டம்பர் நாலாந் தேதியன்று ஸேலத்திலிருந்து ரைட்டுக்கு ஸ்வாமிஜி எழுதிய கடிதத்தில் 'இதோ கவிதை செய்ய முயற்சி செய்து சில வரிகள் எழுதியுள்ளேன். இந்த ஹிம்சையை உங்களுடைய அன்பு மன்னிக்கும் என நம்புகிறேன்' என்று முகவுரையுடன் 'பர்வதத்தின் மீதும் பள்ளத்தாக்கிலும்' (O'er Hill and dale) என்று தொடங்குகிறார்!

**கம்பீரம் கொழிக்கின்ற காலைப்பொழுதிலும்**
**உருகித் துவள்கின்ற இரவுப்பொழுதிலும்**
**பிரகிருதி எழிலிலும் பட்சிகள் இசையிலும்**
**உன்னை நான் காண்கிறேன்......**
**மோகனக் குழந்தையின் மெல்லிய இமை களைத்**
**தாழ்த்தும் தாயின் தாலாட்டிலே நின்றன்**
**தேன் குரல் கேட்கிறேன்......**

என்றெல்லாம் அழகுணர்ச்சியும் பக்தியும் கலந்து கவிதையாயுள்ளது.

சர்வமத மகாசபை கூடவிருக்கும் ஸெப்டம்பர் மாதம் பிறந்து வளர்ந்து வரலாயிற்று.

ஸ்வாமிஜி சிகாகோவுக்கு ரயில் ஏறினார், முதலில் இருந்த கலக்கங்களெல்லாம் ஒருவாறு தீர்ந்து தெய்வம் தம்மைப் பாலித்து வருகிறது என்ற நம்பிக்கையுடன். என்றாலும் தெய்வம் மீண்டும் மீண்டும் சோதனை செய்துதான் வந்தது. புடம் போட வேண்டாமோ?



''இந்த மனிதர் நாயை ஏன் கடிக்க ஓடுகிறார்?''
''அவர் பேபர் பேப்பரில் வருவதற்காக!''

ஸ்வாமிஜி சிகாகோ வரும் வழியில் எங்கேயோ தாம் செல்லவேண்டிய விலாசத்தைத் தொலைத்து விட்டார். சர்வ மத மகா சபையின் தலைவரான டாக்டர் பார்ரோஸ் என்பவரின் பெயரை மட்டும் சொல்லி அந்த மாநகரத்தில் இடத்தைத் தெரிந்துகொள்வது இயலாத காரியமாயிருந்தது. இரவு வந்து விட்டது. களைத்துப் போயிருந்த ஸ்வாமிஜிக்கு ஒரே தூக்கமாக வந்தது. பேசாமல் ரயில் நிலையத்திலிருந்த ஒரு பெரிய காலிப் பெட்டிக்குள் படுத்துக் கொண்டார். பகவான் மீது பாரத்தைப் போட்டுவிட்டு நிம்மதியாகத் தூங்கினார். சில நாட்களில் சர்வமத மகாசபையையே ஒரு கலக்குக் கலக்க இருந்தவர் அன்றிரவை அமெரிக்காவில் ஓர் அநாதையைப் போல உணவும், படுக்கையுமின்றிக் கழித்தார்!

மறுநாள் காலை எழுந்தவுடன் புது நீரின் நறுமணத்தை மோந்த ஸ்வாமிஜி அந்த மணம் வந்த திக்கை நாடி நடையைக் கட்டினார். 'லேக்ஷோர் ட்ரைவ்' என்ற ஏரிக்கரைச் சாலையை அடைந்தார். பணம் கொழுத்த நாகரிக வாசிகள் வாழும் இடம் அது. பசிக் கொடுமை தாங்காமல் வீடு வீடாகப் பிச்சை கேட்டுக் கொண்டும் சர்வ மத மகா சபைக்கு வழி கேட்டுக் கொண்டும் ஸ்வாமிஜி சென்று கொண்டிருந்தார். கௌரவம் பெறவேண்டிய இடத்திலும் அவர் மானாபிமானம் விட்ட பரிவிராஜகராக யாசகம் செய்ய வைத்து விட்டான் ஆண்டவன்! அவரை யாரும் லட்சியம் செய்யவேயில்லை; வீட்டுக் காவலர்கள் அந்த ஹிந்துப் 'பக்கிரி'க்குப் பதில் சொல்லாததோடு அவருடைய முகத்திலேயே கதவைச் சாத்தினர்.

எவ்வளவு நாழிதான் நடப்பது? அப்படியே சாலை ஓரத்தில் தளர்ந்து உட்கார்ந்து விட்டார் ஸ்வாமிஜி — 'இறைவா, நீ என்ன செய்தாலும் சரி' என்று கூறியபடியே.

அவருடைய குரல் இறைவனின் இதயக் கதவைத் தட்டியது. அந்தக் கதவு திறந்தது:

ஸ்வாமிஜி அமர்ந்த இடத்துக்கு நேரே சாலையில் இருந்த மாளிகையின் கதவும் திறந்தது.

ராணி போல் பண்பும் பொலிவும் பொருந்திய ஒரு பெண்மணி வெளிப்பட்டாள். வாசல் படிக்கட்டுகளில் மளமளவென்று இறங்கி வந்தாள். (தொடரும்)

# வாழ்க்கை ஒளிகளின் வளப்பமான அழகு



சான்ஃபோரைஸ்ட் பாப்லின்ஸ் :
கோல்ட் ட்ரிங்க், ப்ளுபார்ட், எவர்ப்ரைட்,
குட் ஷைன்,

ஷர்ட்டிங்ஸ் : ஸ்டிரைப், டாப்பி, செக்ஸ், பைஜாமா

தோதீஸ் : ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல்,
ப்ளாடினம், காம்ராஜ்





ஸூட்டிங்ஸ்,
காபர்டின்

செலவான கண் புட்டாக்கள்

ப்ரின்ட்ஸ் :

ப்ரின்டட் லான்ஸ், வாயில்ஸ், பாப்லின்ஸ்,
ஸ்கிரீன் ப்ரின்ட் ஸாரீஸ்

2x2 கவர்ச்சியான முழு வாயில்கள்—வரிகளிலும்
புட்டாக்களிலும்

·SANFORIZED·



அரவிந்த்
மில்ஸ் லிமிடெட் அஹமதாபாத்




மேஜையின் மீது கிடந்த கடுதாசியைப் பிரித்துப் படித்தபோது வேதாசலத்தின் முகம் சுண்டிவிட்டது. ஏதாவது பண உதவி புரியும்படி கூடப் பிறந்த சகோதரியின் கடிதத்தை மறு முறை காண அவர் விழிகள் கூசின. ''சுற்றம் என்றால் பிடுங்கல்தான்'' என்று வெறுப்புடன் முணுமுணுத்துக் கொண்டு மேல்துண்டினால் வியர்வை கசிந்த நெற்றியைத் துடைத்துக்கொண்டிருந்த வேளையில் வெளி வாசலில் எதிர்பாராத சமயத்தில் இஸ்மாயில் நின்று கொண்டிருப்பதைக் கண்டதும் வேதாசலம் திகைத்துப் போய் விட்டார்.

''என்ன இஸ்மாயில் சாஹேப் திடுதிப்பென்று காட்சி அளிக்கிறீர்?'' — சற்றுக் கலவரத்துடன் தம் குமாஸ்தாவை வேண்டா விருப்பத்துடன் வரவேற்றார் வேதாசலம்.

''அடுத்த வாரம் ரம்ஜான் பண்டிகை வருகிறது'' — இழுத்தார் இஸ்மாயில்.

''ரொம்ப சந்தோஷம். பண்டிகையை ஜாம்ஜாம்னு கொண்டாடுமய்யா. அவரவர் மதம் சீரழியக் கூடாதென்றால் இந்தமாதிரி பண்டிகைகளின் மகத்துவத்தைக் காப்பாற்றுவது மனித குலத்தின் கடமையாகும். குறிப்பாக இந்தக் காலத்தில்—சாஹேப்...ரம்ஜான் பண்டிகையை ஜமாய்த்துத் தள்ளும்'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசிவிட்டார் வேதாசலம்.

''செலவுகள் கையைக் கடிக்குது ஸார்!'' பற்களை இளித்தார் இஸ்மாயில்.

''நேற்றுத்தானே சம்பளம் வாங்கிக் கொண்டீர்!'' அவரிடம் சள்ளென்று எரிந்து விழுந்தார் வேதாசலம்.

''குடும்பத்து மாதச் செலவுக்கே அது சரிக்கட்டி வருவது கஷ்டமாக இருக்கு''—ஜீவனற்ற குரலில் உரைத்தார் இஸ்மாயில்.

''எவ்வளவு துணி கிடைக்கிறதோ அதற்கேற்றாற்போலத்தானே சட்டை தைக்க வேண்டும்?'' முறுவலித்தார் வேதாசலம்.

''இந்த ரம்ஜான் பெருநாளைக் காசையெல்லாம் விரயமாக்கித் தடபுடலாகக் கொண்டாட வேண்டும் என்ற எண்ணம் எனக்குக் கிடையாது. வழக்கம்போல் வீட்டுக்காரி, குழந்தை குட்டிகளுக்குத் தேவையான துணிமணிகள் வாங்கியும் விட்டேன்....''—விரலை நொடித்தார் இஸ்மாயில். வதனத்தில் கவலை ரேகைகள் படரலாயின.

''ரொம்ப சந்தோஷம்.''

''வருஷா வருஷம் இந்தப் பண்டிகை நாளன்று தவறாது பூர்த்தி செய்து வரும் என் அந்தரங்க **'ஆசை'** இந்த வருஷமும் நிறைவேற வேண்டும் என்ற எண்ணம்தான் என்னைக் 'காப்ரா' பண்ணுது ஸார்.''

''சொல்லு.''—சிரத்தையின்றிச் சொன்ன வேதாசலம் சாய்வுநாற்காலியில் சாய்ந்தார்.

''ஒரு புது ஷேர்வானி கோட்டு தைத்து அணிந்து கொள்ள வேண்டும் என்ற ஒரே ஒரு ஆசை ஸார்!'' — பற்களை இளித்தார் இஸ்மாயில்.

''அப்படியா!'' — மூக்குக் கண்ணாடியை மேலும் கீழும் அசைத்தார் வேதாசலம், பார்வையை வேறு திசையில் திருப்பிய வண்ணம்.

''அதற்காக ஐம்பது ரூபாய் தேவைப்படுகிறது. தயவுகூர்ந்து அதை நீங்கள் எனக்குப் பண்டிகை முன்பணமாக அளித்து விட்டால் நான் ரொம்ப ரொம்பக் கடமைப்பட்டவனாவேன் சார்.''

''ஐம்பது ரூபாயா?'' — தேள் கொட்டினாற் போல் துள்ளியெழுந்தார்.

''ஆமாம், ஸார்!'' — பின்தொடர்ந்தார் இஸ்மாயில்.

''நேற்றுத்தானே கலை கலையாக மாதச் சம்பளம் வாங்கிக் கொண்டீர். இன்றைக்கு முன்பணம் வாங்க வந்து விட்டீராக்கும்! சபாஷ்.......'' — குரலை உயர்த்திக் கொக்கரித்த வேதாசலம், ''சாஹேப்! இப்போது நம்ம கம்பெனி இருக்கிற நிலைமை எனக்கும் உமக்கும் தெரிந்த விஷயம்தானே!'' என்றார்.

''ஸார்!'' — கைகளைப் பிசைந்தார் இஸ்மாயில்.

''நிலைமை அப்படியிருக்க என் வீட்டுக்கே வந்து விட்டீரே சாஹேப்!''

''வருஷத்துக்கு ஒரு தடவை வருகின்ற புனிதப் பெருநாள் ஸார். அந்த நாளன்று யாருடைய உள்ளமும் ஏக்கத்தில் அவதிப்படக் கூடாது என்ற நல்லெண்ணத்துடன் தான் உங்கள் வாசற்படிகளில் ஏறினேன்.''

''இவ்வளவு மன்றாடும்போது நான் என்ன செய்வது? சரி..... இருபதோ முப்பதோ வாங்கிக் கொள்ளும்.'' — வேதாசலத்தின் குரலில் கண்டிப்பு தொனித்தது. இமைகளை இறுக மூடிக்கொண்டார்.

''அன்புகூர்ந்து நான் கேட்டபடியே ஐம்பது கொடுத்து விடுங்கள் ஸார். மாதா மாதம் பத்துப் பத்தாக என் சம்பளத்தி லிருந்து கழித்துக் கொள்ளுங்கள்'' என்று கெஞ்சினார் இஸ்மாயில்.

''சாஹேப்......நீர் என்னை விடமாட்டீர் போலும். இங்கேயே இரும்'' என்று சொல் லிக் கொண்டே அறைக்குள் நுழைந்த வேதா சலம் மறுகணம் பணத்தைக் கொண்டு வந்து இஸ்மாயிலின் கைக்குள் திணித்தார்.

''சாஹேப்..... நீங்கள் கேட்டபடியே கொடுத்து விட்டேன். இனி மேல் வருஷா வருஷம் இந்தத் 'தொல்லையை' எனக்கு வைத்து விடாதீர்'' என்று வறட்டுச் சிரிப்பை எழுப்பினார் வேதாசலம்.

''ஸார்! ஒரு தாழ்மையான வேண்டு கோள்'' என்று பணிவுடன் தொடர்ந்தார் இஸ்மாயில்.

''சொல்லும்.'' — சீறினார் வேதாசலம்.

''பெருநாள் பண்டிகையன்று இந்த ஏழை யின் இல்லத்துக்கு முதலாளி விஜயம் செய்ய வேண்டும்.''

''கட்டாயம் வருகிறேன் சாஹேப். நீர் உடனே வீடு திரும்பி மற்றக் காரியங்களைக் கவனியும்.''

உடலை வளைத்துப் பலத்த சலாம் போட்டு விட்டுத் தம் எசமானரிடம் விடைபெற்றுக் கொண்டார் இஸ்மாயில்.

**வா**னிலே 'ஷவ்வால்' பிறை தென்பட்ட மறுநாள் ரம்ஜான் பண்டிகை பொல பொல வென்று விடிந்தபோது பாய்மார்களின் உள் ளங்கள் உவகையினால் குலுங்கின.

''இஸ்மாயில் சாஹேப்'' என்ற பலத்த பரிச்சயமான குரல் வீட்டுக்குள் ஊடுருவிப் பாய்ந்ததும் புறக்கடையில் தம் குழந்தை களுடன் 'கண்ணாமூச்சி' விளையாடிக் கொண் டிருந்த இஸ்மாயில் சாஹேப் அலறிப் புடைத் துக் கொண்டு வெளிவாசலுக்கு ஓடினார். தம் கம்பெனியின் முதலாளியான வேதா சலத்தை 'ஈத் முபாரக்' என்ற வாழ்த் தொலியுடன் அன்புடன் வரவேற்றுப் பரக்கப் பரக்கப் பத்தமடைப் பாயை விரித்து அதில் விருந்தினரை அமரச் செய்தார். சிறு மலை வாழைப்பழச் சீப்பு, வெற்றிலைப்பாக்கு கொண்ட தாம்பாளத்துடன் சந்தனப் 'பியாலா'வை எடுத்து வந்து மிக்க பணி வோடு அவர் முன்னால் வைத்து விட்டுக் கைகளைக் கட்டிக் கொண்டு நின்றார். சந்த னத்தைத் தமது மார்பில் பூசிக் கொண்ட வேதாசலம் வெற்றிலைக் காம்புகளைக் கிள்ளு வதில் மும்முரமானார்.

''பண்டிகை யெல்லாம் சுபமாக முடிஞ்சு தாக்கும்.'' — கண்ணாம்பைச் சுண்டு விரலில் எடுத்த வண்ணம் பேரன்புடன் கேட்டார் வேதாசலம்.

''அல்லாஹுத்தாலாவின் அருளாலும் தங்களைப் போன்ற பெரியோர்களின் ஆசி யாலும் சந்தோஷமாகப் பெருநாள் கழிந்தது ஸார்!'' — கட்டுக்கடங்காத களிப்புடன் மறு மொழியளித்தார் இஸ்மாயில்.

''ரொம்ப மகிழ்ச்சி. நீர் ஆசையோடு தைத்த அந்தப் புது ஷேர்வானியைப் போட் டுக் கொண்டு என் முன்னால் வந்து நில்லும். எப்படி நவாபு போல் ஜில் ஜில்லென்று காட்சி அளிக்கிறீரென்று கண்குளிரப் பார்க்கிறேன்!'' கலகல வென்று சிரித்தார் வேதாசலம்.

''ஸார்...... அந்த ஷேர்வானி..........'' தயங்கினார் இஸ்மாயில் தடுமாற்றத்துடன்.

''அதை முதலில் போட்டுக் கொண்டு வாரும். உம்மை ஆசீர்வதிக்கிறேன்.''

''ஸார்...... வந்து வந்து....'' விழிகளை உருட்டினார் இஸ்மாயில். கால்கள் நிலை கொள்ள வில்லை.

''என்ன சாஹேப்....: நட்பட்டுனு சொன்ன காரியத்தைக் கவனிப்பீரா......''— பொய்க் கோபத்துடன் செல்லமாக மிரட்டி னார் வேதாசலம்.

தயங்கித் தயங்கிப் பின்கூடத்துக்குள் புகுந்த இஸ்மாயில் சில நிமிஷங்கள் கழிந்து அதே கோலத்துடன் தோற்றமளித்ததும், வேதாசலம் திடுக்கிட்டார்.

''ஸார்....! நான் சொன்ன அந்த ஷேர் வானி.......'' — தட்டுத் தடுமாறிக்கொண்டு சட்டென்று தம் ஜுப்பா பைக்குள் கையை விட்டு ஏதோ ஒன்றை இஸ்மாயில் துழாவிய போது வேதாசலம் உதடுகளை இறுகக் கடித் துக் கொண்டிருந்தார்.

தொடர்ந்தார் இஸ்மாயில்; ''இன் றைய புனித நாளன்று புது ஷேர்வானி போட்டுக் கொள்ளப் போகிறேன் என்று என் அந்தரங்க ஆசையை வெளியிட்ட போது நீங்கள் அடைந்த மகிழ்ச்சியை நான் எப்படி ஸார் மறப்பேன்? உங்களிடம் பண்டிகை முன்பணம் வாங்குவதற்காக நான் அன் றைய தினம் ஆடினது பொல்லாத நாடகம் ஸார்.''

''ஹா!'' — திணறி விட்டார் வேதாசலம்;

''அதற்குரிய காரணத்தை நீங்கள் அறிவீர் களானால் கபட வேஷம் போட்ட இந்தப் பாவியை இந்த நன்னாளில் மன்னிக்காமல் போக மாட்டீர்கள்.'' — நாத் தழுதழுக்க, விழிகள் கலங்க இஸ்மாயில் சொன்னபோது வேதாசலம்வாயடைத்து உட்கார்ந்திருந்தார்.

''ஸார்!'' தொடர்ந்தார் இஸ்மாயில்.

''மாதச் சம்பளத்தை என் வீட்டுக்காரி யிடம் முதல் தேதியன்றே நான் கொடுத்து விடுவது வழக்கம். அந்தப் பேதை எவ் வளவோ அல்லல்பட்டுக் குடும்ப சம்ரக்ஷணை நடத்தி வருவது எனக்குத் தெரியாத விஷய மல்ல. பண விஷயத்தில் அவள் காட்டுகிற சிரத்தை, கண்டிப்பை ஒருநாளும் மீறுதவன் நான். என் தாய் தந்தையர் வழியிலே தூரத்து பந்துக்கள் இருக்கிறார்கள் ஸார். பரம ஏழைகள். வருஷா வருஷம் இந்த ரம்ஜான் பண்டிகை வரும்போதெல்லாம் என் மனைவிக்குத் தெரியாமல் அவர்கள் ஒவ்வொரு வருக்கும் பத்துப் பத்து ரூபாய் நான் அனுப்பி வருவதைக் கடமையாக மேற்கொண்டிருந் தேன். இந்த வருஷம் எதிர்பாராத செலவு களினால் அந்தக் கடமையை நிறைவேற்ற

முடியாமல் தவித்தபோதுதான் உங்களை நேரில் சந்தித்து ஷேர்வானி தைக்கப் போகிற தாக நெஞ்சறியப் பொய் சொல்லிக் கபட நாடகம் ஆடிப் பணத்தை வாங்கிக் கொண்டேன். இந்த ஏழையிடமிருந்து வருகின்ற 'சகைக்காக' ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த அந்த ஏழைச் சொந்தக்காரர்களுக்கு அந்தப் பணத்தை அன்றைய தினமே தபாலில் அனுப்பி விட்டேன் ஸார். இதோ பாருங்கள்.'' — ஜேபியிலிருந்து ஐந்து மணி யார்டர் ரசீதுகளை எடுத்துத் தம் எசமானர் முன் இஸ்மாயில் வைத்ததும் வேதாசலம் ஸ்தம்பித்து விட்டார்.

''ஸார்...... இன்றைய பெருநாளில் நான் அடைந்த மகிழ்ச்சி இதற்கு முன்பு நான் அனுபவித்ததேயில்லை.'' — மலர்ந்த முகத்துடன் சொன்ன இஸ்மாயிலின் விழிகளில் துளித்த ஆனந்தக் கண்ணீரைக் கண்ட வேதாசலம் சட்டென்று எழுந்து நின்றார். தம் முன்னால் சிரம் கவிழ்த்துப் பணிவுடன் நின்று கொண்டிருந்த அந்தக் குமாஸ்தாவைப் பாசம் நிறைந்த விழிகளால் நோக்கி, ''என் அருமை இஸ்மாயில் சாஹேப், நீர்தானய்யா மனிதர்'' என்று மிக்க உணர்ச்சியுடன் சொல்லிக் கொண்டே அவரை இறுக அணைத்துக் கொண்டார் வேதாசலம்.


















நாளொரு மேனியாக...

# எழிலோங்கச் செய்வது ரெக்ஸோனு




கொஞ்சி உறவாடி நாளொரு மேனியாக உமது
எழிலுக்குப் பொலிவை ஊட்டி வளர்ப்பது ரெக்ஸோனு.
இதில் வியப்பென்ன? சரும எழிலுக்கான
தைலங்களின் கலவையான 'கேடில்' இருக்கிறது
ரெக்ஸோனுவிலே. தவிரவும், கமகமவென்று புதுமணம்
கமழ்வதனுல், மனமோங்கி மலரும் உங்கள் பொலிவு.

**கேடில் அடங்கிய ரெக்ஸோனு உங்கள் சருமத்திற்கு உகந்தது.**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்

# பேசும் விரல்கள்

ஆர். சூடாமணி

எங்கும் சிமெண்ட் புகை, சுண்ணாம்பு நெடி; ஒரு பக்கத்தில் செங்கல் குவியல்! ''இங்கே வா'', ''அங்கே போ'', ''இப்படிக் கொண்டா'' என்ற இரைச்சல்கள். மேஸ்திரி சண்முகத்திடம் ஆட்களுக்கெல்லாம் அச்சம், மரியாதை. கோபம் வந்தால் ஆளை அனுப்பி விட்டு வேட்டியைக் கச்சம் கட்டித் தானே கொல்லுருவைக் கையில் எடுத்துக்கொண்டு குந்தி உட்கார்ந்தபடி செங்கற்களையும் சிமெண்டையும் தட்டித் தட்டிக் கணப்பொழுதில் கட்டடத்தை வளர்ப்பான்.

வீட்டில் ரிப்பேர் வேலை. மாடியில் இருந்த பழங்கால ஓட்டுக் கூரை பழுதாகி விடவே, அந்தக் கூரையை அகற்றி விட்டுத் தளம் போடவும் அதையொட்டி ஓர் அறை அமைக்கவும் ஏற்பாடு செய்திருந்தேன். மாடியில் வேலை நடக்கும் இடத்துக்கு நேர் எதிரில் என் அறை இருந்தது. அங்கு உட்கார்ந்து கையில் பிரித்த புத்தகத்துடன் எதிரில் நடப்பவற்றையே கவனித்துக் கொண்டிருப்பேன். புத்தக நிகழ்ச்சிகளைப் போன்ற சுவாரசியமான நாடகம் ஒன்று அங்கு நடைபெற்றுக் கொண்டிருந்தது.

''சித்தாள்! என்ன மயில் நடை நடக்கறே? ம், வா வா! பாண்லியெ இந்தப் பக்கமா கொண்டா'' என்று அடிக்கடி எழும்பும் சண்முகத்தின் குரல்களுக்குக் கீழ்ப்படிந்து ஓடியாடும் சித்தாள்களான உப்பரவப் பெண்களில் அமராவதியும் ஒருத்தி. அமராவதி என்று இத்தனை பொருத்தமான பெயரை யார் சூட்டினார்களோ! கண்களைச் சூறையாடும் அழகு. அங்கு வேலை செய்யும் பல ஆண்களின் பார்வைக்கும் அந்த அழகே கேந்திரப் பொருள். அதில் தவறேதும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. சிறப்பு எங்கு எவ்வுருவில் இருந்தாலும் ஆராதனை அதன்



பிறப்புரிமை. நான் பெண்தான். ஆயினும் அந்த அழகு என்னையும் கவரத் தவறவில்லை.

ஆணும் பெண்ணும் ஒருங்கே உழைத்துச் சம்பாதிப்பதால் உண்மையான சமத்துவம் அமையப்பெற்றது தொழிலாள வர்க்கம்; அவள் ஆண்களோடு சிரிப்பதும் பேசுவதும் பரிகாசம் செய்வதும் சமத்துவத்தின் அடிப்படையில் விகல்பம் இல்லாத செயல்கள்தாம்—அந்தச் செயல்களில் நேர்மையான சலுகை இருந்த எல்லை வரையில்.

ஒருவனைப் பொறுத்தமட்டில் அமராவதியிடம் அந்த நேர்மையின் மாற்றுக் குறைந்து போயிற்று. அவன் அங்கிருந்த கொத்தனார்களில் ஒருவன். முருகேசன் என்று பெயர்; அவனும் அமராவதியும் பார்த்துக் கொள்ளும் விதத்திலேயே ஆரம்பம் முதல் எல்லாம் புரிந்து விட்டது.

''ஏ, அமராவதி! இன்னிக்கு என்ன, ஷோக்கா மயிரை வளைச்சுச் சாமந்தி வச்சிருக்கறே!'' என்று சிரிப்பிலேயே நூறு சமாசாரம் சொல்வான் அவன்.

''அது ஏன் ஒங்கண்ணை உறுத்துது? ஒன் ஊட்டுப் பூவையா பறிச்சுக்கிட்டேன்?'' என்று அழகின் சவாலில் அவனுக்கு ஆயிரம் பதில்களை உணர்த்துவாள் அவள்.

''என்ன, அப்படிக் கேட்டுட்டே ஒரு கேள்வி? நானே உனக்குப் பூ வாங்கியார மாட்டேனா?''

''ஐயே! பூ வாங்கித் தர்ற மொகரக் கட்டையைப் பாரு!''

''இந்த முருகனை இன்னான்னு நினைச்சுக் கிட்டே நீ? நாளைக்கே பூ வாங்கியாரேனா இல்லையா பாரு. அதுவும் ரோஜாப் பூவு.''

''வாங்கியாந்து...?''

''ஒந்தலையிலே வெக்கறேன்.''

இதெல்லாம் அவ்வப்போது என் காதில்படும். மேஸ்திரிக்குக் கேட்காமல் பேசப்படும் பேச்சு. மற்ற ஆட்களின் முன்னிலையிலும் அவர்களுடைய இத்தகைய பேச்சும் பார்வையும் குறைவதில்லை. எல்லாருக்குமே தெரிந்த விஷயம்தான். இவ்வித நடவடிக்கைகளால் முட்டாளாகும் மூன்றாமவன் ஒருவன் இருந்ததால் அவர்களது மனித இயல்பின் ஓர் அடிமைக்

நுரை உணர்வு இதையெல்லாம் ரசித்துக் கொண்டிருந்தது போதும்.

ஆம்! அமராவதிக்குப் புருஷன் இருந்தான்: அவனும் வேறெங்கோ அல்ல, அங்கேயே இருந்தான். பெயர் சிங்காரம். தச்சு வேலை செய்பவன். புது அறைக்கு நிலைப்படி வைத்து விட்டுக் கதவுகளை உருவாக்கிக் கொண்டிருந்தான். உயரமான கருத்த தேகத்தை வளைத்து, வேலையின் லயிப்பில் ஆழ்ந்த தீவிர முகபாவத்துடன் வியர்வை சொட்ட அவன் நீண்ட கரங்களை முன்னும் பின்னுமாய் ஓட்டி இழைப்புளியால் கதவுப் பலகையைச் சீவிக் கொண்டிருப்பான். வேலையை நிறுத்தினால் தலை முண்டாசை அவிழ்த்துத் தோளில் போட்டுக் கொண்டு மதிய உணவுக்குப் போவதற்காகத்தான் இருக்கும். திரும்பி வந்ததும் மீண்டும் வேலையின் தீவிரம். குனிந்த தலை நிமிர்வதே அபூர்வம்தான். பக்கத்தில் மரச் சுருள்களின் பாம்பனைய ஒயில் நெளிவு குவிந்து கொண்டே போவதுதான் நேரம் கடப்பதின் ஒரே அறிகுறி.

''என்ன, அமராவதி! ஒம் புருசன் ஒன் அழகைப் பத்தி என்ன சொல்றான்? சாமந்திப்பூ நல்லா யிருக்குதாமா?''

இது போல் எவனோ கிளப்புவான். மற்றவர்கள் சிரிப்பார்கள்.

''ஆமாமாம். கண்ணே மூக்கேன்னில்லே வர்ணிப்பான் பெண்டாட்டியை! இல்லியா அமராவதி ?''

''ஆனாலும் நீ இப்படி எப்ப பார்த்தாலும் முருகனோட சாடை காட்டிக்கிட்டே இருக்கியே, ஒம் புருசன் கவனிச்சாத் திட்ட மாட்டானா?''

மீண்டும் சிரிப்பு.

''ஐயையோ! பயமுறுத்தாதே அண்ணே! அது திட்டினா உலகமே அதுந்துபூடாதா?''

பெருத்த நகைப்புக்கு இடையே அவள் முகத்தில் பயத்தை நடித்துக் காட்டுவாள்.

இந்தப் பரிகாசத்துக்கு இலக்கான சிங்காரம் தன்பாட்டில் வேலையைக் கவனித்துக் கொண்டிருப்பான். அவர்கள் பேசுவது அவனுக்குக் கேட்காது. அவர்களுக்கு அவனால் மறுமொழி சொல்லவும் இயலாது. அவன் ஓர் ஊமைச் செவிடு.

அவனை நையாண்டி செய்ய இந்தக் கேலிப் பேச்சுக்கள் அவன் அருகிலேயே நடக்கும். வெளிவிஷயங்கள் எதுவும் பாதிக்காத தன் மௌன உலகில் ஆழ்ந்த அவன் வேலையில் ஈடுபட்டிருப்பான். அந்த நெஞ்சத்தில் ஏதாவது எண்ணங்கள் ஓடுகின்றனவா? புறத் தோற்றங்களைக் குறித்த ஆவலின் அலைகள் ஏதேனும் அவனிடம் எழுகின்றனவா? யார் அறிய முடியும்? அவன் உள்ளத்தை மலர்த்தவோ விஷயங்களை விளக்கவோ 'டெஃப் அண்ட் டம்ப்' பள்ளியில் அவன் உலகின் பிரமாணங்களை விரிவாக்கவோ இயலும்படியான வர்க்கத்தில் அவன் பிறக்கவில்லையே. அவனிடம் யாராவது ஏதாவது சொல்ல வேண்டுமென்றால் முதலில் அவனைத் தொட்டுக் கவனத்தை ஈர்க்க வேண்டும். பிறகு நிதானமாக உதடு, கண், கை ஆகியவற்றின் சைகைகளினால் மனக் கருத்தை உணர்த்த வேண்டும்: அவன் புரிந்து கொள்வான்: அது தான் அவனுக்குப் பழக்கம். அவன் இயல்பாகவே அறிவாளி. வேலையும் மிக நேர்த்தியாக இருக்கும். அவனது கைத்திறம் படிந்த மர வேலை தனிமையானதொரு சித்திரத்தைப் போன்றதொரு கலைப் பொருள். அத்தனை ஆர்வம் அவனுக்கு அந்த வேலையில். அவன் விரல்கள் உயிருள்ளவை. வேலை செய்து உரமேறிய வலுவான நீண்ட விரல்கள். நெஞ்சை மொழிபெயர்க்கும் சாதனங்கள். சுற்றிலும் பரவிக் கிடக்கும் உளி, இழைப்புளி, ரம்பம், சுத்துக் கட்டை முதலியவற்றை அவன் விரல்கள் தொடும்போது பூவைத் தீண்டுவது போல் அந்த ஸ்பரிசம் கொஞ்சும்.

புதுச் சுவரின் சிமெண்ட் பூச்சை மட்டப் பலகையால் அளவெடுக்கும் முருகேசன், ''ஏரிக் கரை மேலே போறவளே பொன் மயிலே!'' என்று உல்லாசமாய்ப் பாடியவாறே அமராவதியை ஓரக் கண்ணால் பார்ப்பான்.

''ஏ, இரையாதேப்பா, சிங்காரத்தின் காதிலே விழுந்தால் சத்தம் போடப் போகிறான்'' என்பான் இன்னொருவன்.

''என்ன, சிங்காரம், ஒரு நல்ல 'ராக் அண்ட் ரோல்' பாட்டுப் பாடேன்!'' என்று ஒருவன் அவனுடைய குனிந்த தலையை நோக்கிக் கூறுவான். சிங்காரத்தின் விரல்கள் மௌனமாய் மனக் கனவுகளை மரத்தில் வடித்துக் கொண்டிருக்கும்.

''என்ன அமராவதி! நீயும் நானும் ஒரு டூயட் பாடுவமா? சிங்காரம் கேட்டு ரசிக்கட்டுமே?'' என்பான் முருகேசன்.

''அட போவியா சும்மா!''

அவள் செல்லக் கோபத்தைக் கண்ணசைவில் காட்டி முகத்தை வலிப்பாள்.

சில சமயம் எவனுக்காவது சிறிது இரக்கம் பிறக்கும். ''ஏ, போதும், நிறுத்துங்கடா! அவனுக்குக் காது கேட்காதுன்னு அதுக்காக இப்படியா அவன் முன்னாலேயே அட்டூழியம் செய்வாங்க?''

''செவிட்டுப் பயலும் ஊமைப் பயலும் எண்டா கல்யாணம் கட்டறாங்க?—அதுவும் இப்படி ஒரு பெண்ணை!''

''கட்டிக்கிட்டால் இப்படித்தான் ஆவும்: நல்லா வேணும் அவனுக்கு.''

''ஆனாலும் நீ செய்யறது நல்லாயில்லே, அமராவதி. ஏ சிங்காரம், ஒன் எதிரிலேயே ஒம் பெண்டாட்டியை இன்னொருத்தன் அடிச்சிட்டுப் போறான்டா!''

இப்படி எப்போதோ எழும் ஓர் அனுதாபப் பேச்சுகூட அவனது செவிட்டுக் காதுகளில் விழுந்தால்தான் போகும். அவனுக்கு விஷயத்தை யாரும் அறிவுறுத்தவில்லை. அதுவும் நல்லதென்றே நான் எண்ணினேன். அந்த அறியாமையின் நிம்மதியைக் குலைப்பதில் பயனென்ன?

தனியானதோர் இன்ப உலகில் அவன் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். இசையைக் கேளாத, இசையைப் பேசாத உலகம். எப்போதாவது அவன் தலை நிமிரும்போது அன்பு பொங்க மனைவியின் முகத்தைத்தான் பார்ப்பான். புன்னகை செய்வான்: அவளும் இதயத்தை மறைத்துப் பதிற் புன்னகை புரி

# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!




வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம்
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.




**பாமாலிவ் டிலக்ஸ்—மயக்கும்**
**17 செண்டுகளின் அற்புதமான கலவை!**

**விதவிதமான**

# கிளியர்டோன்
# குடும்பத்திற்கான
# சாமான்கள்

Kleertone


இம்பீரியல் இஸ்திரிப்பெட்டி


இஸ்திரி மேஜை


கெட்டில்


ஒற்றை ஹாட் ப்ளேட்


டோஸ்டர்


மேஜை விசிறி மற்றும் ஸீலிங் விசிறி


குக்கிங் ரேஞ்சு


வாட்டர் பாய்லர்


ஹாட் ஃபுட் காபினெட்

JWT-GRA-2080

எல்லா அதிகாரம் பெற்ற கிளியர்டோன் வியாபாரிகளிடமும்,
நேஷனல்-எக்கோ வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி . பெங்களூர் . பாட்னா . ஸெகந்திராபாத்

GRA

வான். சில சமயம் அவனைப் பாராமலே அவள் ஏதோ வேலை செய்துகொண்டிருந்தால் அவளது சிலையொத்த வடிவழகைக் கண்க ளால் மாந்தியபடி அவன் சற்று நேரம் அமர்ந் திருந்து விட்டு, அந்தக் காட்சியால் உடலில் புத்துயிர் பெற்றுவிட்டது போல் புதிய தெம் புடன் வேலையில் மறுபடியும் மூழ்குவான்.

என் உள்ளம் கனத்தது.

''என்னு, அன்ன நடை போடறீங்க எல் லாரும்? வேகமா வாங்க. கண்டி புடிக்கிற வேலையெ இத்தினி நாளைக்கு இழுத்தடிச்சா எப்பிடி? சித்தான், பெரியான் எல்லாரும் கண்டிக் கல்லைப் பாண்லியில் தூக்கிப் போட் டுக்கிட்டு வேகமா நடந்து வாங்க, ம், ஜல்தி!'' என்று மேஸ்திரியின் குரல் ஒலித்துக் கொண்டே யிருந்தது.

இப்படியே நாட்கள் கடந்தன.

தளம் உருவாகி வந்தது.

சிங்காரம் ஒரு ஜோடிக் கதவைப் பூர்த்தி செய்து விட்டு இன்னொரு நிலைப்படியில், பொருத்த வேண்டிய கதவுகளை இழைப்பதில் ஈடுபட்டான்.

அகாலத்தில் மழை பிடித்துக் கொள்ளவே கட்டட வேலை தவக்கமாகத் தொடங்கியது. 'கண்டி' பிடித்துப் பிறகு அதன் மீது ஒரு தரம் வார்த்திருந்த சிமெண்ட் குழம்பு மழை யைத் தடுக்க முடியவில்லை. முற்றுப் பெறாத தளத்தின் வழியாக அந்த இடத்துக்கு நேர் கீழே இருந்த வீட்டின் நடுக்கூடத்தில் நீர் இறங்கிக் கொண்டே யிருந்தது. புதிதாய் அமைத்த தளப் பகுதி வெயில் பெறாததால் எளிதில் காய்ந்து இறுகவில்லை.

ஆட்கள் தவறாமல் வேலைக்கு வந்து கொண் டிருந்தார்கள். ஞாயிற்றுக்கிழமையில் விடு முறை. மற்ற ஆறு நாட்களும் வேலை. பேச்சும் கும்மாளமும் வழக்கம் போல் ரகசியக் குறு குறுப்போடு மேஸ்திரியின் கவனத்தினின்று தப்பி நடைபெற்று வந்தன.

சிங்காரத்தின் தீவிரமும் லயிப்பும் சிறிதும் குன்றவில்லை. எல்லாரையும் போல் அவ னும் தலைமேல் ஒரு பிளாஸ்டிக் விரிப்பைப் போர்த்திக் கொண்டு வந்து விடுவான். வழக் கம் போல் பலகையில் உழைப்பு. அதன் முன்னேற்றத்தில் கலையழகு. உருவாக்கும் விரல்களில் உணர்ச்சியின் பொழிவு.

வேலையில் திளைத்திருந்த அவன் தோளை ஒருவன் தொட்டு, ''சாப்பாட்டுக்கு நேர மாகிறது'' என்று சைகை காட்டினான். தொழிலாளிகள் அனைவரும் சாப்பாட்டுக்குப் போகத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். அமராவதி ஒரு கும்பலிடையே இருந்தாள். அவள் கூந்தலில் ஒரு ரோஜாப்பூ. யார் சூட்டியது? அந்தக் கூட்டத்தில் முருகேசனும் இருந்ததால் அவள் கண்களில் அலாதியான பொலிவும் வாயில் சரளமும் அசைந்தன. அந்த அழகின் பொலிவையே பார்த்தபடி சிங்காரம் சற்றுநேரம் மெய்ம்மறந்துநின்றான். மழைச் சாரலில் அழகு நனைந்தது. சரத்தைக் கண்ட சிங்காரம் தாவி வந்து தன் பிளாஸ் டிக் விரிப்பை மங்கையின் மேல் போர்த்தி அவளை அழைத்துக் கொண்டு தான் மழை யில் நனைந்தவாறு சென்றான். பின்னால் நின்ற மற்றவர்கள் சிரித்தார்கள். அந்த ஏளன ஒலி சிங்காரத்துக்குக் கேட்கவில்லை. அவனது உணர்ச்சிமய விரல்கள் பிளாஸ்டிக் விரிப்பை மங்கையின் தலை மேல் சரியாகப் பொருத்தின. அவற்றின் அசைவில் அவள் கொண்டையின் ஓரத்தில் செருகப்பட்டிருந்த ரோஜாப்பூ அவிழ்ந்து கீழே விழுந்தது.

இரண்டு நாட்களில் கதிரவன் மீண்டும் பொன் முகம் காட்டினான். நெஞ்ச உவகை யும் உடற் சுறுசுறுப்பும் அவனுடைய நிழல்கள் போல் உடன் தோன்றின.

விடுமுறை நாளான ஞாயிறன்று யாரும் வரவில்லை. எனக்கும் விடுமுறை — பார்க்கும் தொழிலிலிருந்து.

திங்கட்கிழமை விடிந்தது. ஆட்கள் வேலை யில் முனைந்தனர். சிங்காரம் வழக்கமான தீவிர லயிப்போடு தன் வேலையில் ஆழ்ந் தான். பொருத்தி முடுக்கி முடித்த கதவு





ளுக்கு வார்னிஷ் பூசிக்கொண்டிருந்தான். அன்றும் பார்த்தேன். பிறகு ஒவ்வொரு நாளும் கவனித்தேன். அமராவதியைக் காணவில்லை. அவள் இடத்தில் சிங்காரத்தின் தங்கை ஒருத்தி வேலைக்கு வந்திருந்தாள்.

மெள்ள மேஸ்திரியிடம் விசாரித்தேன். அவள் திடீரென்று உடல் நலிவினால் கிராமத்துக்குப் போயிருப்பதாய்ச் சிங்காரத்திடமிருந்து அறிந்ததாகச் சண்முகம் விளக்கினான்.

சிங்காரத்தை யோசனையோடு பார்த்தேன். சப்தமற்ற தன் தனியுலகில் அவன் நிதானமாய் இயங்கிக் கொண்டிருந்தான். ஒரே சீரான செயற்போக்கு. அதில் நிறுத்தமும் இல்லை. அவசரமும் இல்லை.

சில நாட்களில் ஆட்களிடையே ரகசிய முணுமுணுப்புக்கள் ஒலிக்கத் தொடங்கின. ஆவலை எத்தனை நாள் அடக்க முடியும்? அமராவதி கிராமத்திலிருந்து இன்னும் திரும்பவில்லை. அவர்களிடையே குழப்பம். குறிப்பாக, முருகேசன் கரை சேர்ந்த மீனாகத் தவித்தான்.

''ஏ சிங்காரம்!''

அழைத்தால் அவனுக்குக் கேட்காது என்பதை மறந்த ஆர்வக் குரல்கள்.

''சே, சே, மனுஷன் செவிடாகவும் ஊமையாகவும் பொறக்கக் கூடாதுடா!''

''அவன் சரியாக இருந்திருந்தால் நம்ம முருகேசனுக்கு அதிருஷ்டம்அடிச்சிருக்குமா?''

பெருத்த சிரிப்பு. அவன் அசையவில்லை.

''சிங்காரம்!'' அருகில் வந்து தொட்டான் ஒருவன். கைகளால் கழுத்தில் தாலி அணிவது போல் சைகை செய்து ''உன் மச்சினி எங்கே?'' என்று நிதானமான உதட்டசைவிலே ஜாடை மொழியில் வினவினான்.

சிங்காரம் வெறித்துப் பார்த்தான். கேள்வியைப் புரிந்து கொண்டதும், ''அவள் ஊருக்குப் போயிருக்கிறாள் என்பதைச் சைகை மூலம் உணர்த்தினான். பிறகு மறுபடியும் தன் வேலையில் ஆழ்ந்தான்.

''நெசமாவே ஊருக்குப் போயிருப்பாளா?''

''எனக்கு நம்பிக்கையில்லேப்பா.''

''ஒடம்பு நல்லாத்தானே இருந்திச்சு. திடீருன்னு என்ன ஒடம்பு?''

''பொண்டாட்டி அளகாயிருக்கிறா. மத்தவங்க கண்ணுலே படவேண்டாமுன்னு— மறைச்சு வச்சிட்டானா?''

''பொறுத்துப் பார்ப்போமே. ரெண்டு நாளிலே திரும்பி வந்துடுறாளோ என்னமோ?''

''அமராவதி எங்கே, சொல்லுடா!'' என்று திடீரென்று கூவினான் முருகேசன்.

மௌன ஆழத்தில் அந்தக் கூவல் பலமின்றி அமுங்கி மறைந்தது. வார்னிஷ் கொடுக்கும் விரல்கள் அமைதியாகத் துணியைப் பற்றி மேலும் கீழுமாய்ச் சலித்துக் கொண்டிருந்தன.

''ஏ சிங்காரம்!''

பயனில்லை.

''டேய்!''

வியர்த்தமென்று அறிந்திருந்தாலும் ஆத்திரத்தில் யோசனை பதியவில்லை.

''டேய்!''

''ஏன் சும்மா கத்தறே முருகேசா? அவனுக்குக் கேக்கவா போகுது?''

ஒரு நிமிஷம் செயலற்று நின்றான் முருகேசன். பிறகு மீறிவந்த ஆவேசத்தில் இரண்டடி முன்னால் பாய்ந்து சிங்காரத்தின் சட்டைக் கழுத்தைப் பற்றி இழுத்தான்.

அதிர்ந்து திரும்பினான் சிங்காரம். கையில் வார்னிஷ் துணி ஸ்தம்பித்து நின்றது. விரிந்த கண்கள் ஒரு விநாடி நிதானித்தன. அதன் அமைதியான ஆழம் ஒருவித அச்சமூட்டுவதாயிருந்தது. சட்டென்று அக்கண்கள் சீற்றத்தில் பொங்கிப் படர்ந்தன. முகம் சிவந்தது. கைத்துணி கீழே நழுவியது. இமைப்பொழுதில் கைகளை உயர்த்திச் சிங்காரம் முருகேசனின் கழுத்தில் தன் வலிமை மிக்க விரல்களைச் சுற்றி அழுத்தினான்.

அதிர்ச்சியில் மற்றவர்கள் அசைவிழந்தனர். சில அலறல்கள் எழுந்தன. பிறகு தம்மையறியாது ஓரடி பின்னுக்குச் சரிந்து நின்றனர். முருகேசனின் கண்களில் பீதி வெடித்தெழுந்தது. தன் கைகளால் சிங்காரத்தின் கைகளை நீக்க முயன்றான். அந்த இரும்புப் பிடியைத் தளர்த்த முடியவில்லை.

எல்லாம் ஒரு விநாடிக்குத்தான். கூவி அலறிய தொழிலாளிகள் சிங்காரத்தின் கைகளை அகற்ற நெருங்கி வருமுன் அவனே பிடியை நெகிழ்த்தித் தன் கைகளை விலக்கிக் கொண்டான். கம்பீரமும் திரஸ்காரமும் நிறைந்த கண்களால் முருகேசனைப் பார்த்து விட்டு ஜன்னல் வழியாக வெளியே காறி உமிழ்ந்தான். கழித்த உதடுகளில் இகழ்ச்சி நெளியிட்டது. ஒரு தரம் தன் கைகளைப் பார்த்துக் கொண்டான். பிறகு தலையைத் திருப்பிக் கொண்டு மீண்டும் தன் வேலையில் நிதானமாக ஆழ்ந்தான்.

''டே, அவனுக்குப் பைத்தியண்டா!''

''ஆளைக் கொல்ல வர்றானே!''

''மேஸ்திரிகிட்டே சொல்லி நிறுத்திடவேண்டியதுதான். எல்லோருக்குமே ஆபத்து.''

தன் கழுத்தைத் தடவிக்கொண்டே முருகேசன் அச்சம் மாறாத விழிகளுடன் திகைத்துப் பார்த்தவாறு பின்னுக்கு வந்து கூட்டாளிகளோடு சேர்ந்து கொண்டான்.

என் கண்களில் காட்சி மாறவேயில்லை. உடல் புல்லரித்தது. வேலையில் மூழ்கியிருந்த சிங்காரத்தின் பலம் மிகுந்த உயிருள்ள, உணர்ச்சியுள்ள, நீண்ட விரல்களை நோக்கினேன். உள்ளத்தில் அச்சம் சிலிர்ப்பாக ஓடியது.

கழுத்தை வளைத்த அவற்றின் செயல்...!

என்னை என்னை நான் பிரமித்து நின்றேன்.

அவன் ஊமைச் செவிடு; ஆகவே கண் ஜாடைகளையும் உதட்டசைவுகளையும் படிக்கக் கற்றவன்; அவன் அறிவாளி; ஆகவே அவற்றின் பொருளை உணர்ந்துகொண்டான். அவன் அன்பில் நிறைந்தவன்; ஆகவே ஆத்திரத்திலும் நிறைந்து விட்டான்.

திறமை மிக்க விரல்கள். உள்ளத்தை மொழிபெயர்க்கும் விரல்கள்....



பல தினப் பத்திரிகைகள் சஞ்சிகைகளின் தென்னிந்தியப் பிரதிநிதி திரு பி. என். சீனிவாசன் அவர்களின் புதல்வர் திரு பி. எஸ். விஷ்ணு குமார் அவர்களுக்கும் இந்திய புகைபொருள் இலாகா சென்னைக் காரியாலயத்தைச் சேர்ந்த திரு கே. ராமசாமி அய்யங்கார் அவர்கள் புதல்வி சௌபாக்யவதி சுந்தர நாயகி என்ற சித்ராவுக்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

பிச்சுமணியின் கோபத்தைக் கண்டு ஜகந்நாதன் பயந்துவிடவில்லை. அவர் சாவதானமாக, ''வெளியூர்க் காற்று உன் தாத்தாவின் உடம்புக்கு நல்லது! உலக அனுபவம் உன் அறிவுக்கு நல்லது! தீர்த்த யாத்திரையின் புண்ணியம் உங்கள் பரம்பரைக்கே நல்லது!'' என்றார்.

''இல்லை! உமக்குத்தான் ரொம்ப நல்லதென்று நினைக்கிறீர்! ஆனால் என்னதான் தந்திரமாகக் குயுக்தி சூழ்ச்சித் திட்டங்கள் போட்டாலும் அவை கடைசி வரை பலித்துவிடாது! உதாரணமாக என்னை வெளியூருக்கு விரட்டுவதால் உமக்கு எந்த வித லாபமும் கிடைக்கப் போவதில்லை.''

''தம்பி! என்ன சொல்கிறாய்? புரியவில்லையே?''

''புரியவில்லையா?'' என்று சீறியெழுந்த பிச்சுமணி, ''பெரிய அறிவாளியான உமக்குப் புரியாமல் இருக்காதே! ஓய், டாக்டர்! உம் வழியிலிருந்து என்னை அப்புறப்படுத்துவதற்காகத்தான் என் தாத்தாவோடு என்னை வெளியூருக்கு இவ்வளவு அவசரமாக அனுப்புகிறீர்! ஆனால் எந்த நோக்கத்தோடு என்னை அனுப்புகிறீரோ அந்த நோக்கத்தை நான் இல்லாத சமயத்தில் நீர் நிறைவேற்றிக் கொள்ள முயலக் கூடாது!... இப்போது புரிகிறதா?'' என்று கேட்டான்.

''தம்பி! நீ ஏதோ என்னிடம் தகராறு செய்து கொள்ளவே வந்திருக்கிறாய்! என்னுடைய அபாரமான அறிவைக் கண்டு உனக்குப் பொறாமை! உன்னுடைய இளமை உள்ளத்தையும் அதன் உணர்ச்சியையும் கண்டு எனக்குப் பொறாமை! ஆகவே நம்மிருவருக்கும் இடையே பகைமை இருப்பது இயற்கைதான்!''

''நம்முடைய குண தோஷங்களைப் பற்றி நான் விளக்கம் கேட்க வரவில்லை.''

''ஓ, அது எனக்குத் தெரியும்! காதல் விஷயமாகப் பேச வந்திருக்கிறாய்!''

''ஆமாம். என் காதல் விஷயமாகப் பேசத்தான்!''

''தம்பி! நீ தாராளமாகக் காதலிக்கலாம்! நீ மேஜருக்கு வெறும் பையன்தான் என்றாலும் பதினெட்டு வயதைத் தாண்டி மேஜராகி விட்ட பையன்!''

''எனக்கு வயது பதினெட்டு அல்ல, இருபது ஆகிறது!''

''ஓ! அப்படியானால் நீ தாராளமாகக் காதலிக்கலாம்!''

''நான் உமாவைக் காதலிக்கிறேன்!''

''அந்த வாத்தியாரம்மாவைத்தானே? .....ம்! அவள் உன்னை விட வயதில் மூத்தவள்!''

''நான் வயதைப் பொருட்படுத்தவில்லை....!''

''ம்! காதலில் எதையுமே பொருட்படுத்த வேண்டிய அவசியமில்லை! ஏனென்றால் காதலுக்குக் கண்ணில்லை, காதில்லை, வயதும் இல்லை.''

''டாக்டர்! நான் உமாவின் உள்ளத்தைக் காதலிக்கிறேன். உமாவையே கல்யாணமும் செய்துகொள்ளப் போகிறேன்!'' என்று பிச்சுமணி உணர்ச்சி உத்வேகத்தோடு கூவினான்.

''தம்பி! கல்யாணமாகாத பெண்ணை யார் வேண்டுமானாலும் காதலிக்கலாம். அவளும் யாராவது ஒருவரைக் கல்யாணத்துக்குத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்!''

''டாக்டர்! நான் உமாவை உயிருக்குயிராகக் காதலிக்கிறேன். உமா



இல்லாவிட்டால் எனக்கு வாழ்க்கையே இல்லை, உலகமில்லை என்றே நீர்மானித்திருக்கிறேன். உமாவுக்காக நான் எதையும் செய்யத் துணிவேன்!''

''தம்பி! நீ அவ்வளவு தீவிரமாக உமாவை ஏன் காதலிக்கிறாய் என்பதும் எனக்குத் தெரியும்! காதலில் பல ரகங்கள் உண்டு! ஒவ்வொரு பெண்ணிடம் ஒவ்வோர் ஆடவன் ஒவ்வொரு ரகத்தை எதிர்பார்ப்பான். உதாரணமாகப் பெண்ணொருத்தியிடம் தனக்கு எதிலும் சமதையாகப் பழகும் தோழமையை ஒருவன் எதிர்பார்ப்பான்! இன்னொருவன் தன் பிரதிபலிப்பையோ தன் அறிவின் ரசனையையோ தன் காதலியிடம் எதிர்பார்ப்பான். தனக்கு மதிமந்திரி போல் ஆலோசனை சொல்லும் புத்தி சாமர்த்தியத்தையோ, தனக்கு வேலைக்காரி போல் பணிவிடை செய்யும் பணிவுடைமையையோ, சாகஸக்காரி போல் சிரித்துப் பேசித் தன்னை மயக்கும் சரசங்களையோ வேறொருவன் விரும்புவான். தன்னைத் துன்புறுத்தி அதிலேயே அலாதியான இன்பம் காணும் ஒருவித முரட்டுத்தனத்தைக் கூடத் தன் காதலியிடம் ஒருவன் இச்சிப்பான். இன்னுமொருவன் தன் காதலியைத் தன்னையும்விட மேலானவளாகக் கருதி அதிக மதிப்புக் கொண்டு அவள் தன்னிடம் ஒருவித தாயன்புடன் அளவிலாத பரிவுகாட்டித் தன்னை ஒரு குழந்தையைப் போலவே வைத்து விளையாட வேண்டுமென்று ஏங்கித் தவிப்பான். இந்தக் கடைசி ரகத்தை ஈடிப்பஸ் — காம்ப்ளெக்ஸ் என்னும் ஒருவித மாத்ரு மோகமென்று சிந்தனையாளர் பிராய்டு தம் ஆராய்ச்சிகளில் குறிப்பிடுகிறார்! தம்பி, இவ்வாறு



மாறுபாடான மன நிலைகளின் காரண மாகத் தோழமைக் காதல், தன் மோகக் காதல், அகந்தைக் காதல், அறிவுக் காதல், எஜமானக் காதல், சாகஸக் காதல், முரட்டுக் காதல், தாய்மைக் காதல், குழந்தைமைக் காதல் என்றெல்லாம் இன்னும் பல ரகங்கள் உண்டு. தம்பி, நீ உமாவின் மீது ஒரு விதத் தாய்மைக் காதல் கொண்டிருக்கிறாய். உமா உன்னிடம் குழந்தைமைக் காதல் கொள்ளவேண்டு மென்றும் எதிர்பார்க்கிறாய்! நானோ தோழமைக் காதல்தான் வாழ்க் கைக்குத் தேவையானது என்று பெரி தாக மதிக்கிறேன். இதுதான் இப் போது நம் விவாதத்துக்குரிய விஷயம். இல்லையா?''

''டாக்டர்! உம்முடைய விவாதங் களோ, தத்துவ விளக்கங்களோ எதுவும் எனக்கு வேண்டாம். உமா சம்பந்தமாக என் விஷயத்தில் நீர் தலை யிடக் கூடாதென்று உம்மை எச்சரிக் கவே வந்தேன்!''

''உன் காதல் விஷயத்தில் என்னை ஓர் எதிரியாகவும் போட்டிக்காரனாக வும் பாவிக்கிறாய்!''

''ஆமாம்!''

''உன் உள்ளத்தில் அளவில்லாத பொறாமை மூண்டிருக்கிறது. அதனால் அர்த்தராத்திரியில் என்னைப் பயமுறுத்த வந்திருக்கிறாய்! ஆனால், தம்பி! உமா வின் விஷயமாக நான் ஏதாவது உனக்கு உதவி செய்ய வேண்டுமென்று நீ கெஞ்சி அழுதிருந்தாலாவது அர்த்தமுண்டு!''

''காதலுக்காக உம்மிடம் நான் பிச்சை கேட்கப் போவதில்லை, டாக்டர். ஆனால் நான் இல்லாத சமயத்தில் நீர் ஏதாவது குயுக்தியான திட்டம் போட நினைத்திருந்தால் அந்த நோக் கத்தைக் கைவிட்டுவிட வேண்டுமென்று தான் சொல்லுகிறேன். ஏனென்றால் உம்மால்தான் என் தாத்தாவோடு போகப் போகிறேன். நான் திரும்பி வரும் வரை உமா விஷயத்தில் நீர் அணுவளவு கூட முன்னேறக் கூடாது. இந்த வாக்குறுதி நீர் கொடுக்கவேண் டும்! அதை நீர் மீறவும் கூடாது!''

''தம்பி! உன் நிபந்தனைகளுக்கெல் லாம் நான் கட்டுப்படாவிட்டால்...?''

''உம்மை... உம்மைக் கொலை செய்து விடுவேன்!'' என்று கூவிய பிச்சுமணி ஆக்ரோஷமாகத் தன் பற்களை நறநற வென்று கடித்தான்.

''தம்பி, நீ அவ்வளவு சுலபத்தில் கொலைகாரனாக மாறிவிட முடியாது!''

''டாக்டர்! நான் கூறும் நிபந்தனை களுக்கு என்ன பதில் கூறுகிறீர்?''

''தம்பி! இரவில் தூங்க வேண்டிய நேரத்தை அனாவசியமாக வீணாக் காதே! பேசாமல் வீட்டில் போய்த் தூங்கு! காலையில் எழுந்ததும் இப்போ தைய உன் அசட்டுத்தனமெல்லாம் ஒருவேளை உனக்கே தெரிந்து உன் புத்தி தெளிவடையலாம்!''

''இதுதான் உம் முடிவா?''

''ஆமாம்! பொறாமை வளரட்டும். ஏனென்றால் அதுதான் காதலின் வளர்ச் சிக்கு வளமான உரம்!'' என்று டாக்டர் ஜகந்நாதன் சிரித்தார்.

''டாக்டர்! கடைசித் தடவையாகக் கேட்கிறேன்!''

''யமனையே எதிர்த்துப் போராடும் டாக்டர் ஜகந்நாதன் சிறுபிள்ளைத்தன மான மிரட்டலுக்கெல்லாம் அசைய மாட்டான்!''

அதற்கு மேல் பிச்சுமணியால் பொறுக்க முடியவில்லை! மிதியுண்ட கட்டவிழ்த்துவிடப்பட்ட காட்டு மிரு கம் போல் குபீரென டாக்டரை நோக் கிப் பாய்ந்து அவரைத் தாக்க முயன் றான். டாக்டர் ஜகந்நாதனும் தற்காப் புக்காக அவனோடு போராட வேண்டி யிருந்தது. இருவரும் அதி மூர்க்க மாகச் சண்டையிட்டார்கள்.

பிச்சுமணியின் நெற்றியில் நகக்கீறல் விழுந்து அதில் எரிவுடன் ரத்தக் கசிவை உணர்ந்ததும் அவன் இன்னும் ஆவேச மாகப் போர் வெறி கொண்டு அப்படியே டாக்டரைப் பிடித்துத் தள்ளினான். டாக்டர் சுழன்று தடுமாறி ஒரு மேஜை யின் மீது மோதுண்டு பொத்தென்று கீழே விழுந்தார்.

'ஆ!' என்ற ஓர் அலறலுடன் அவர் குரலும் அடங்கி விட்டது.

அதன் பிறகு ஒரு விநாடி ஆயிற்று; இரண்டு விநாடி ஆயிற்று...

டாக்டர் ஜகந்நாதன் விழுந்துகிடந்த இடத்திலிருந்து அசையவே இல்லை! பேச்சு மூச்சுத் தெரியாமல் அவரு டைய உடல் உணர்வற்ற சவம் போல் கிடந்தது!

பிச்சுமணி திடுக்கிட்டான். தன் கண் எதிரே ஒரு மரணத்தைக் காணும் பயங்கரப் பீதி அவனைப் பிடித்துக் கொண்டது.

மறுபடியும் டாக்டர் ஜகந்நாதன் சுய உணர்வு பெற்றுக் கண் விழித்துப் பார்த்த போது தம் முகத்தில் தண்ணீர் தெளிக்கப்பட்டு வழிவதையும் தம் முன்

ஒரு கண்ணாடி டம்ளரை நீட்டியவண்ணம் பிச்சுமணி குனிந்து நின்று பார்த்துக் கொண்டிருப்பதையும் உணர்ந்தார்.

ஆனால் பிச்சுமணியின் முக பாவம் இப்போது அடியோடு மாறிப் போயிருந்தது. அவனுடைய பசுமையான முகத்தில் பேய்த்தனமான ஒரு பீதியின் சவக் களை படிந்திருந்தது. கண்ணாடி டம்ளரைப் பிடித்திருந்த அவனுடைய கை வெடவெடவென ஆடியது. உடலெல்லாம் நடுங்கிக்கொண்டேயிருந்தது.

அவனுடைய கையிலிருந்து விழுந்து விடுவது போலத் தத்தளித்த கண்ணாடி டம்ளரை டாக்டர் ஜகந்நாதன் மெல்ல வாங்கி அதில் உள்ள நீரை அருந்தினார்.

அப்போது பிச்சுமணியின் நிலைதான் அதிகக் கவலைக்கிடமானதாக அவருக்குத் தோன்றியது. உடம்பில் சிறு நகக் கீறல்களைத் தவிரக் காயங்கள் ஏதும் இல்லையென்றாலும் நெஞ்சில் ஏதோ ஒரு திகிலடித்தது போலவும் அந்த ஜுர வேகத்தில் எந்தக் கணமும் மயங்கிச் சுருண்டு விழுந்து விடுவான் போலவும் தோன்றியது.

உடனே டாக்டர் ஜகந்நாதன் விருட்டென்று எழுந்து பிச்சுமணியைத் தூக்கிப் பிடித்து ஒரு சோபாவில் உட்கார வைத்து விட்டு, மருந்து மாத்திரையும் ஒரு டம்ளர் தண்ணீரும் கொண்டு வந்து கொடுத்து, ''இதைச் சாப்பிடு, பிச்சுமணி!'' என்று கட்டளையிட்டார்.

அவரை ஏறிட்டுப் பார்க்காமலே பிச்சுமணி அவற்றை வாங்கி மௌனமாகச் சாப்பிட்டான். அவன் உள்ளத்தில் குடிகொண்டிருந்த சைத்தான், ஆக்ரோஷ வெறி, அகம்பாவம் எல்லாம் போய் விட்டன. ஆளே உடைந்து முற்றிலும் நிலை குலைந்தவன் போலவே காணப்பட்டான்.

அவனை டாக்டர் ஜகந்நாதன் கூர்ந்து பார்த்தபடி, ''உனக்கு என்ன நேர்ந்தது பிச்சுமணி?'' என்றுகேட்டார்.

''ஒன்றுமில்லை! நீங்கள்.... நீங்கள்.. செத்துப் போய் விட்டீர்களோ என்று நினைத்தேன்!'' என்று சொல்லி விட்டுத் தன் முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டு விம்மினான்.

''அவ்வளவுதானே? கவலைப்படாதே. நான் அவ்வளவு சுலபத்தில் சாக மாட்டேன்! நீ நிம்மதியாக வீட்டுக்குப் போய்ப் படுத்துத் தூங்கு!''

''டாக்டர்! உங்களுக்குக் காயம் ஏதும்......''

''ஊஹூம்! சில கணம் மூர்ச்சையே தவிர எனக்கு ஊமைக்காயம் கூடப்படவில்லை. அது வரைக்கும் உனக்குத் தாங்ஸ்!'' என்று புன்முறுவல் பூத்தார்.

சுவர்க் கடிகாரத்தில் மணி இரண்டு அடித்தது.

''டாக்டர்! நான் வந்து உங்களைத் தாக்கினேன் என்கிற விஷயத்தை.....''

''உமாவிடம் மட்டுமல்ல; வேறு யாரிடமும் சொல்ல மாட்டேன்! ஒரு சின்னப் பையன் வந்து என்னைப் பயமுறுத்தித் தாக்கினான் என்றால் அது என் பெருமைக்கல்லவா இழுக்கு!'' என்று ஜகந்நாதன் சிரித்தார்.

பிச்சுமணி ஒரு கணம் மௌனமாக நின்றான். பிறகு டாக்டரின் முகத்தைத் திரும்பிக் கூடப் பாராமல் மௌனமாகவே வெளியேறிச் சென்றான்.

சில கணங்களில் அவன் தன் 'பேபி'க் காரை வேகமாகக் கிளப்பிச் செல்லும் சப்த ஜாலங்களும் கேட்டன.

''மடையன்! ஆனால்.... உணர்ச்சிகரமான வாலிபன்! மிகவும் உணர்ச்சிகரமான வாலிபன்!'' என்று டாக்டர் ஜகந்நாதன் ஒரு பெருமூச்சு விட்டு விட்டு மறுபடியும் தம் இலக்கிய உலகத்துக்குத் திரும்பி, நோட்டுப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு, 'காதலும் பொறுமையும்' என்ற தலைப்பின் கீழ் மனோதத்துவக் குறிப்புகளை வரைய ஆரம்பித்தார்.

## அத்தியாயம் முப்பத்தொன்பது

# அறிவும் இருதயமும்

**வ**சந்திக்கு இப்போதெல்லாம் டாக்டர் ஜகந்நாதனின் நினைவுதான். அவளுடைய உள்ளத்தை ஜகந்நாதனின் புன்முறுவல் விளையாடும் முகமும் அறிவொளி வீசும் கண்களும் அதிகமாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. அவருடைய குறும்புப் பேச்சுக்களும் குதர்க்கமான வாதங்களும் புதுமைப் பெண்ணுள்ளத்தில் அப்படியே பதிந்திருந்தன. கனவுகளில்கூட அவள் ஜகந்நாதனோடு புதுப் புது உலகங்களுக்குப் பிரயாணம் செய்வது போன்ற காட்சிகளே தொடர்ச் சித்திரம் போல் சுவாரசியமாக வந்து நின்றன.

கல்லூரி விட்டதும் சிநேகிதிகளோடு அரட்டையடிப்பது, சைக்கிளை எடுத்துக் கொண்டு சுற்றுவது, பெண் உரிமைக்காக முழக்கமிடுவது போன்றவற்றில்



ஒருவர் : பசும் பால் இருக்கா?

பால்காரன் : பசும் பாலென்ன, புலிப்பால் கூடத் தருவேன் சார், குழாயில் ஜலம் வந்தால்.....!

பொழுது போக்கிக் கொண்டிருந்த அவள், ஜகந்நாதனோடு பழகத் தொடங்கிய பிறகு அவற்றையெல்லாம் மறந்து விட்டாள். கல்லூரி விட்டதும் நேரே ஜகந்நாதனின் நர்ஸிங் ஹோமுக்கு வந்து ஒரு மணி நேரமோ இரண்டு மணி நேரமோ அவரோடு பேசிக்கொண்டிருக்கத் தவிப்பாள். நேரச் சிக்கனத்தைப் பெரிதாக மதிக்கும் டாக்டர் ஜகந்நாதனோ வசந்தி வந்து விட்டால், தம் புத்தக அறையில் உட்கார்ந்து அவளுக்காகத் தம் நேரத்தைச் செலவழிப்பதில் பெரிய கொடை வள்ளலாகவே மாறி விடுவார்! அவருடைய நாவல்களைப் பற்றியும், புரட்சிகரமான கருத்துக்களைப் பற்றியும் இருவரும் வாக்குவாதங்கள் செய்ய ஆரம்பித்து விட்டால் பொழுதுபோவது இருவருக்குமே தெரியாது!

''வசந்தி! நீ அடிக்கடி எதற்காக என்னைத் தேடி வருகிறாய் என்பது எனக்குத் தெரியும்!'' என்று டாக்டர் ஜகந்நாதன் ஒரு புன்முறுவலுடன் மெல்லத் தம் கண்களைச் சிமிட்டினார்.

வசந்திக்கு வெட்கத்தால் முகம் சிவந்து போய் அது அவளுடைய உதடுகளில் புன்முறுவலாகவும் மலர முயன்றது. ஆனாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் ஜம்பமாகத் தன்னைச் சமாளித்துக் கொள்ள முயன்றவளாய், ''உங்கள் அறிவின் ஜாலங்களைத் தெரிந்து கொள்வதற்காகத்தான் ஸார் வருகிறேன்!'' என்று சிரித்தாள்.

''ஓ! என் அறிவைக் கண்டுதான் உனக்குச் சுவாரசியம் பிறந்திருக்கிறதா? ஆனால் வசந்தி..... அறிவை அதிகமாக்கிக் கொள்வதிலும் ஆபத்து உண்டு. ஏனெனில், அது இருதயத்தின் உணர்ச்சிகளைத் தின்று விடும்!''

''உங்களைப் போல் ஒரு பெண்ணும் அறிவாளியாகி விடக் கூடாதென்று நினைக்கிறீர்களா, டாக்டர்?''

''அளவுக்கு மீறிய அறிவு பெண் இயல்புகளையும் பெண்மையையுந்தான் அதிசீக்கிரம் தின்று விடுகிறது. மேலும் அறிவாளிப் பெண்ணைவிட அசட்டுப் பெண்தான் ஓர் ஆடவனுக்கு அதிக ஆனந்தமோ, நிம்மதியோ, அவஸ்தையோ கொடுக்க முடியும் என்பதையும் நீ மறந்துவிடக் கூடாது!''

''ஆணுக்காகத்தான் பெண் படைக்கப்பட்டிருக்கிறாள், ஆண்தான் அவளுடைய ஒரே லட்சியம் என்கிற அநீதியான கொள்கையை மட்டும் நான் ஒப்புக் கொள்ள முடியாது, ஸார்!''

''அதை உன் அறிவு ஒப்புக்கொள்ளாது! ஆனால் உன் உள்ளுணர்வு என்றாவது ஒரு நாள் அதை ஒப்புக் கொள்ளும்! அதிலே அலாதியான சுவையும் காணும்! அதுதான் இயற்கையின் ரகசியம்!''

வசந்தி யோசனையில் ஆழ்ந்தாள்.

அவளை ஜகந்நாதன் கூர்ந்து நோக்கினார். அவள் புத்திளமையுடன் புது ரோஜா மொட்டைப் போலக் குலுங்கிக் கொண்டிருந்தாள். நாவலாசிரியரின் கலைக் கண்களுக்குப் புதுப் புது உணர்வுகள் ஊட்டக் கூடியவளாகவும் தோன்றினாள்.

''வசந்தி! என் நாவல்களைப் படித்ததும், பெண்களைப் பரிகசித்து எழுதுகிறேனென்று என்மீது உனக்குக் கோபம் கோபமாக வந்தது, இல்லையா?''

''ஆமாம்! என் சிநேகிதிகளெல்லாம் உங்களுக்கு எதிராகக் கட்சி கட்டிக் கொண்டு நிற்கிறார்கள். உங்கள் விலாசம் தெரிந்தால் இலேசில் விட மாட்டார்கள்! ம்..... அவர்களை மட்டும் இங்கே அழைத்து வந்து உங்களைக் காட்டினால்......?''

''மியூஸியத்தில் உள்ள விநோதப் பொருள்களைப் பார்ப்பதுபோல் என்னைப் பார்ப்பார்கள். நாணிக் கோணிக் கொண்டோ, கூச்சப்பட்டுக்கொண்டோ துணிச்சலை வரவழைத்துக் கொண்டோ, ஏதாவது கேள்விகள் கேட்பார்கள். ஆனால் நான் சொல்லும் பதில்களைக் கவனிக்க மாட்டார்கள். என் கவனம் எந்தப் பெண் மீது அதிகமாக விழுகிறதென்றுதான் ஒவ்வொருத்தியும் கவலைப்படுவாள்!''

''ஸார்! உங்களுக்குத் தற்பெருமை அதிகம்!'' என்றாள் வசந்தி. (தொடரும்)



# சேமிக்கத் தயங்க வேண்டாம்

" எப்படி சேமிப்பது? சேமித்த பொருளைப் பாதுகாப்பது எப்படி?" என்றெல்லாம் ஒருவர் தயங்குவது சகஜம். உங்களுக்கு அத்தகைய தயக்கத்திற்கு அவசியம் இல்லை. இந்தியன் பாங்கின் கிளை அலுவலகத்தில் உள்ள ஏஜண்டு, சேமிப்பு, சேமிப்புப் பண முதலீடு, இன்னும் இதர பொருளாதாரப் பிரச்னைகள் சம்பந்தமாக உங்களுக்கு யோசனை கூறி உதவத் தயாராக இருக்கிறார். எங்களுக்கு மொத்தம் 153 கிளைகள் இருக்கின்றன. அவற்றில் 26 சென்னை நகரில் உள்ளன. நாடெங்கும் கிளைகளும், உலகின் பல பாகங்களில் நிருபர்களும் இருப்பதால், பாங்கித் துறையில் நாங்கள் எங்களது வாடிக்கைக்காரர்களுக்குப் பெரும் அளவில் சேவை செய்ய முடிகிறது. இந்தத் துறையில் 56 வருடங்களாக நாங்கள் பெற்றுள்ள சிறந்த அனுபவம் அச்சேவைக்கு நல்ல துணையாக இருக்கிறது.



பணிபுரிவதையே பண்பாகக் கொண்ட பாங்க்

**இந்தியன் பாங்க் லிமிடெட்**

(ஸ்தாபிதம்: 1907)

பதிவு அலுவலகம்:
இந்தியன் சேம்பர் பில்டிங்ஸ்,
எஸ்பிளனேட், சென்னை-1

G. S. சுந்தரம், காரியதரிசி

EP-18-13

# கல்லூரிச் சர்க்கஸ்

ஜீ.எஸ். பாலகிருஷ்ணன்

'சந்திரோதயம்' கல்லூரியில் பணியாற்றிய பேராசிரியர்கள் ஒருவர்பின் ஒருவராக ராஜினாமா செய்யத் தொடங்கினார்கள். எல்லோரும் ஒரே காரணத்தைச் சொல்லித்தான் வேலையை விட்டார்கள், அதாவது மாணவர்கள் அடிக்கும் கொட்டத்தை இனிமேல் தங்களால் தாங்க முடியாதென்று.

பிரின்ஸிபால் சொக்கலிங்கம் ஆசிரியர்களின் பெருவாரியான ராஜினாமாவைக் கண்டு மனம் கலங்கவில்லை. நேர்மாறாக மிகவும் உவகையுற்றார். இன்னும் கல்லூரியில் பாக்கியிருந்த ஓரிரு ஜாம்பவான்கள் எப்பொழுது வேலையை விட்டு விட்டுப் போவார்கள் என்று ஆவலுடன் எதிர்பார்த்தார். அதற்காக அமெரிக்காவில் மாணவர்கள் செய்யும் விஷமங்களைக் குறித்துப் போக்கிரிப் பிள்ளைகளுக்கு இரகசியமாக விளக்கம் தந்தார். பழைய தலைமுறையைச் சேர்ந்த ஆசிரியர்கள் கல்லூரியை விட்டுத் தொலைந்தால்தான், தாம் விரும்பும் புரட்சிகரமான சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டு வர முடியும் என்று நிச்சயமாக நம்பினார். தாம் வகுத்திருக்கும் புதுக் கல்வித் திட்டம் நடைமுறைக்கு வந்தவுடன் கல்லூரியில் பிரமாத அச்சமும் அடக்கமும் ஒழுங்கும் நிலவும் என்பதில் அவருக்குக் கொஞ்சங் கூடச் சந்தேகம் இருக்கவில்லை.

பிரின்ஸிபால் சொக்கலிங்கத்துக்குத் தெரியும், மாணவர்கள் ஒழுங்கற்ற முறையில் நடந்து கொள்வதற்குக்காரணம் 'சப்'பென்ற பாடங்களும், சுவையற்ற போதனையுமென்று. ஐந்தாம் வகுப்பில் படித்த இந்து தேச சரித்திரத்தைத்தான் பி. ஏ. வகுப்பிலும் சொல்லித் தருகிறார்கள். மொகலாய சாம்ராஜ்யம் வீழ்ந்ததற்கான பத்து காரணங்களைப் பத்து வருஷங்கள் தொடர்ந்து படித்தால் எந்த மாணவனின் மூளைதான் குழம்பாது? பாடத்தில் அவனுக்கு எப்படி ஆர்வம் இருக்கும்? சரித்திரத்தைப் போல்தான் இதர பாடங்களும்! இந்தக் கசக்கும் பாட திட்டத்தை அடியோடு மாற்றி அமைத்தால்தான் கல்லூரியில் ஒழுங்கு நிலவும் என்பது டாக்டர் சொக்கலிங்கத்தின் துணிபு.

கடைசியாக அந்த நாளும் வந்தது. அவர் கனவு நனவாகும் நன்னாள். கல்லூரியில் பாக்கியிருந்த 'கார்மேகக் கோனார் மாண



வர்கள் அனைவரையும் மதியற்ற மந்திகள் என்று குறிப்பிட்டு விட்டு, ராஜினாமாக் கடிதத்தை மேஜைமீது எறிந்த போது சொக்கலிங்கம் சொர்க்கபோகத்தையே அனுபவித்தார். வெள்ளைத் துணி போட்ட குடையை விரித்தபடி கார்மேகக் கோனார் வெளியே காலெடுத்து வைத்த மறுநிமிஷம், சொக்கலிங்கம் தம்முடைய புதுக் கல்வித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்காகக் 'கல்லாம்பரதரம்' கூட்டிக்கொண்டார்.

'சப்'பென்ற சரித்திரத்தையும், கசக்கும் கணிதத்தையும், சுவையில்லாத பொருளாதாரத்தையும் தொலைத்துத் தலை முழுகத் தீர்மானித்தார். அவற்றுக்குப் பதிலாகக் கைரேகை சாஸ்திரம், ஜோசியம், மலையாள மந்திர வாதம், சர்க்கஸ், பாம்பாட்டி வித்தை, பஜனை போன்ற ருசிகரமான பாடங்களைக் கல்லூரியில் கற்பிக்க முடிவு கட்டினார். புதுப் பாடங்களைக் கற்பிக்கும் திறமை வாய்ந்த பேராசிரியர்களுக்கான விளம்பரம் அடுத்த தபாலிலேயே பத்திரிகைகளுக்குப் பறந்தது என்று குறிப்பிடவும் வேண்டுமா?

டாக்டர் சொக்கலிங்கத்தின் நவீன கல்வித் திட்டத்தை மெச்சித் தினத்தாள்கள் தலையங்கங்கள் எழுதின. 'பழைய விளக்குகளுக்குப் பதில் புது விளக்குகள்' என்ற தலைப்பின் கீழ் இந்தப் புதுக் கல்வித் திட்டத்தை வானளாவப் புகழ்ந்தது 'தினச் சங்கு'.

அரசியல்வாதிகளில் ஒரு சிலர் சொக்கலிங்கத்தின் கல்வித்திட்டத்தை உலகம் முழுதும் எல்லாக் கல்லூரிகளும் உடனே அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் என்று சாகசம் பிடித்து உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினார்கள்!

சொக்கலிங்கத்தின் கல்லூரிக்குப் புதுப் புது ஆசிரியர்கள் வந்து சேர்ந்தார்கள்.

சாஸ்திர ரத்னாகர சம்பூர்ண சாஸ்திரி, இலாட்களும் மகாராஜாக்களும் தமக்களித்த மெடல்களை அணிந்தபடி, ஜோசியப் பேராசிரியர் ஆசனத்தில் ஜம்மென்று ஏறி உட்கார்ந்தார். ''இந்தியக் குட்டிச்சாத்தானின் நகைச்சுவையும், அமெரிக்கப் பிசாசுகளின் கண்ணீரும்'' என்னும் பொருளைப் பற்றி ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்ற மகா மகா மந்திரவாதி கொச்சுக்குட்டி மேனன் மந்திர வாதப் பேராசிரியராகப் பதவி ஏற்றார். மறுநாளே தாம் குடியிருப்பதற்கு ஒரு மாய மாளிகையும் கட்டிக் கொண்டார். ''மாரீசன் ஹாலில்'' ஆராய்ச்சிக்கான பொருள்களை அழகாக அடுக்கினார்.

ஆயிரம் புலிகளின் வாய்க்குள் தலையை விட்டுத் தப்பித்துக் கொண்ட படே உஸ்தாத் பைராம்கான் சர்க்கஸ் இலாகாவின் தலைவரானார். கட்டம் போட்ட வேஷ்டியுடன், புஜத்தில் தாயத்து பளபளக்க, சாட்டையைச் சொடுக்கியபடி அவர் மேலும் கீழும் நடந்து செல்லுகையில் அக்கம் பக்கமெல்லாம் கிடுகிடுத்தது. ஆராய்ச்சிச் சாலையை அமைப்பதில் பிரமாத சிரத்தை காட்டினதுடன், நானூறு யானைகளுக்கும், முந்நூறு வேங்கைப் புலிகளுக்கும், ஆயிரம் பழைய சைக்கிள்களுக்கும் ஆர்டர் தந்திருந்தார். தம்முடைய அறையிலிருந்து பிரின்ஸிபாலின் அறைக்கு ஓர் கம்பிப் பாலம் அமைத்திருந்தார். வர்ணக் குடையைப் பிடித்தபடி, அவர் கம்பிப் பாலத்தின் மீது நடை பழகும் அழகே அழகு!

பஜனைப் பேராசிரியர் சிம்மக் குரல் செங்கமாச்சார் சேமக்கலத்தை இராப் பகலாக முழக்கினார். அவருடைய ஆராய்ச்சி மாணவர்கள் ஆர்மோனியத்தைக் கழுத்தில் அணிந்துகொண்டு அல்லும் பகலும் அனவரதமும் அலறினார்கள்.



பிரின்ஸிபால் சொக்கலிங்கம் பூரித்துப் பூரித்தே போனார். ஆனால் ஆசிரியர்களிடையே ஓர் அம்மணிகூட இல்லையே என்று அவருக்கு வருத்தம். இதற்காக 'அஸ்ஸாம் நடனம்' என்னும் புதுப் பாடத்தைப் புகுத்தி அதிரூப சுந்தரியை அதற்குப் பேராசிரியை யாக்கினார். ஒரோரு சமயம் எது தேகப் பயிற்சி வகுப்பு, எது நடன வகுப்பு என்று தெரியாமல் தவித்தார்!

சொக்கலிங்கம் நாற்காலியில் சாய்ந்தபடி 'பைல்'களைக் கவனிக்கத் தொடங்கினார். முதல் 'பைலை' அவிழ்த்தவுடன், அதைச் சுற்றிக் கட்டியிருந்த கயிறு சீறிற்று! அடுத்த கணம் அது படமெடுத்து ஆடத் தொடங்கியது. பாம்புப் பேராசிரியர் சம்பந்தமான கடிதங்களை அப்படியே போட்டு விட்டு அலறி அடித்துக் கொண்டு வெளியேறினார் பிரின்ஸிபால். நிஜமான கயிறுகள்கூட இப்பொழுது பாம்புகள் போல் தோன்றின அவர் கண்களுக்கு! நீண்டு தொங்கும் எதையுமே தொட அஞ்சினார் அவர். பிரமை காரணமாகத் தம் கழுத்தில் தொங்கும் 'டை'கூடப் படமெடுத்து ஆடுவது போல் தோன்றியது அவருக்கு. அதைக் கழுத்திலிருந்து பிய்த்தெறிய விரும்பினார் அவர். ஆனால் கை நடுங்கியது. ஏனோ சிவபிரானும், அவர் கழுத்தை வளைத்து நெளியும் சர்ப்பமும் அவர் மனக் கண் முன் தோன்றின. போதாததற்கு அந்தப் பொல்லாத பாம்பாட்டிப் பேராசிரியர் தம் அறையிலிருந்து மகுடியில் 'ஆடு பாம்பே' ஜமாய்த்துக் கொண்டிருந்தார்.

நல்ல வேளை! அஸ்ஸாம் நடனம் கற்பிக்கும் அதிரூபசுந்தரி அவர் கண்களில் தென்பட்டாள்.

"சுந்தரி! சுந்தரி!" என்று அலறினார் பிரின்ஸிபால்.

"என்னங்க? ஏன் இப்படி நடுங்கறீங்க?" என்று கேட்டாள் அவள்.

"பா.....ம்.....பு" என்று மிகச் சிரமப் பட்டுச் சொன்னார் பிரின்ஸிபால்.

"வீல்!" என்று அலறினாள் அதிரூப சுந்தரி. அடுத்தகணம் கண்களைக் கெட்டியாக மூடிக் கொண்டாள்.

"ஐயையோ! பாம்பு என்றால் எனக்கு ரொம்பப் பயம். என்னைக் காப்பாற்ற யாருமில்லையா?" என்று கதறினாள் மங்கை.

"ப...ய...ப்..ப...டா...தே..." என்று கூறி அவள் கழுத்தைச் சுற்றிக் கையைப் போட்டார் பிரின்ஸிபால். அடுத்த கணம், "ஐயோ!" என்று பலமாக அலறி விட்டார். அவள் கழுத்திலிருந்த காசுமணி மாலை அவரைப் பார்த்துச் சீறிற்று!

சேமக்கலத்தின் ஓசையையும், கெண்டா மணியின் டாண் டாண் சத்தத்தையும் கேட்டுத் திரும்பிப் பார்த்தனர் பிரின்ஸிபாலும் பேராசிரியையும். இப்பொழுது ஒருவரை ஒருவர் பயத்திலல் பற்றிக் கொண்டிருந்தார்கள்.

"ரோம் நகரம் தீப்பற்றி எரிந்தபோது நீரோ பிடில் வாசித்தானாம்! எங்கள் உயிர் பறிபோய்க் கொண்டிருக்கும் இந்த வேளையில் பிரின்ஸிபாலாகிய நீங்கள் பேராசிரியையுடன் சிருங்கார லீலையா நடத்துகிறீர்கள்? நீர் நாசமாப் போக!" என்று நெற்றித் திருமண் சிவக்கக்கத்தினார் சிம்மக் குரல் சிங்களாச்சார்.

"பஜனைப் பேராசிரியரே! ஏன் ஆத்திரப் படுகிறீர்கள்? ஆராய்ச்சி மாணவர்களை வைத்துக் கொண்டு என்னை ஏன் அவமதிக்கிறீர்கள்?" என்று கேட்டார் சொக்கலிங்கம்.

"பின்னால் திரும்பிப் பாரும்! எல்லாம் விளங்கும்!" என்றார் பஜனைப் பேராசிரியர்.

திரும்பிப் பார்த்த சொக்கலிங்கம் செத்தே போனார். அரை டஜன் யானைகளும், நாலு சிங்கங்களும், இன்னும் என்னென்னவோ மிருகங்களும் அவர்களைப் பார்த்துப் பசியுடன் ஓடி வந்து கொண்டிருந்தன.

"பஜனை வகுப்புத் தொடங்கியவுடன் கெண்டாமணியின் சத்தத்தைக் கேட்டுச் சர்க்கஸ் வகுப்பு மிருகங்கள் மிரண்டு விட்டன. சென்ற ஒரு மணி நேரமாக எங்களை அவை துரத்தியடிக்கின்றன. நீங்களானால் இங்கே பொறுப்பற்ற முறையில் காதல் பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்."

"சர்க்கஸ் பேராசிரியர் பைராம்கான் எங்கே?"

"அவர் உத்தரத்தில் எங்கேயாவது தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருப்பார்...... அதோ யானைகளும் புலிகளும் நம்மை நெருங்கி விட்டன. ஓடுங்கள்! ஓடுங்கள்!" என்று அவசரப்படுத்தி விட்டுப் பஞ்சகச்சம் தடுக்கப் பாய்ந்து ஓடினார் சிங்களாச்சார்.

பிரின்ஸிபால் சொக்கலிங்கம் அதற்குமுன் தம் வாழ்நாளில் ஓடினதே இல்லை. இப்




உடல் வளைவுகளுக்கேற்றப்போல் அமுக்கப் பட்ட ஆசனமும், முதுகுச்சாய்மானமும் மகிழ்ச்சியூட்டும் வசதியை அளிக்கக்கூடிய உறுதியான எஃகு குழாயினால் செய்யப்பட்ட உலோகப் பாகங்களெல்லாம் வாட்டி யெடுக் கும் முறையில் எனாமல் பூசப்பட்டுத் துருப் பிடிக்காமல் செய்யப்பட்ட நாற்காலியை வாங்குங்கள்.

## சிறந்த தரத்தில் அடுக்கடுக்காக

- ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பரைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் வாட்டி எனாமல் பூசப்பட்டது.
- ஆசனம் மற்றும் முதுகுச் சாய்மானத்தின் அமைப்பு அதிக வசதியை அளிக்கிறது.
- ஈரத் துணியைக்கொண்டே துடைத்து எளிதில் சுத்தமாகவைத் துக்கொள்ளலாம்.
- மடக்குவதற்கு விசேஷ அமைப்பு.
- வழுக்கிவிடாத, தரையைக் கீறாத, ரப்பர் அடிகள் கொண்டது.
- பல்வேறு வர்ணங்களில் கிடைக்கக் கூடியது.




ஆயிரம் காலம்
ஆள்வதற்கு



தயாரிப்போர்:
க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.
பி-35 இந்தியன் எக்ஸ்சேஞ்சு ப்ளேஸ், கல்கத்தா-1

# அமுல் வெண்ணெய் எவ்விதத்தில் அலாதி யானது?

அது 5 மணி நேரத்தில் தயாரிக்கப்படுகிறது.

தினந்தோறும், காலையிலும் மாலையிலும், பாஸ்ச்சரைஸ் செய்யவும் வெண்ணெய் தயாரித்து, பாக் செய்யப்பட்டு வெளியனுப்புவதற்குத் தயாராவதற்கென புதுப் பால் அது சேகரிக்கப்படும் இடங்களிலிருந்து அதிவேகமாக அனுப்பப்படுகிறது.

பால் பாத்திரத்திலிருந்து பாக்கெட்டுக்குள் செல்ல அமுலுக்கு மட்டுமே 5 மணி நேரத்திற்குள் முடிகிறது.




அமுல் வெண்ணெய் புதுமையுடனும், சுத்தமாகவும் போஷாக்கு உள்ளதாகவும் இருப்பதில் வியப்பில்லை!





கெய்ரா டிஸ்டிரிக்ட் கோ-ஆப்பிரேடிவ் மில்க் ப்ரொடியூஸர்ஸ் யூனியன் லிட்., ஆனந்த்.

CBKMF-JA.TAM

பொழுது ஒருபெண்ணையும் சுமந்து கொண்டு ஓடினார். மரங்களில் தொத்தி 'டார்ஜான்' வேலை புரிய எங்கிருந்து தான் அவருக்குச் சக்தி வந்ததோ!

அம்மாடி! கல்லூரி 'காம்பஸ்'ஸுக்கு அப்பால் பெருக்கெடுத்து ஓடிய ஆற்றில் மங்கையுடன் குதித்தார் அவர். இனி ஆபத்தில்லை என்று பெருமூச்சு விட்டார். "யானைகளுக்கு நீந்தத் தெரியும்" என்று நினைப்பூட்டினாள் அவர் பிடியில் நெளிந்த பெண்.

ஒரு விதமாக அக்கரையை அடைந்து ஆசுவாசப் பெருமூச்சு விடுவதற்குள் இருட்டி விட்டது.



"தேர்தலில் நிற்க ஜெயிப்பதற்கு மூவாயிரம் ரூபாய் செலவு செய்தது போதவே போதாது! ஒவ்வொருவரும் தோற்றுப் போவதற்கே ஏழாயிரம் எட்டாயிரம் ரூபாய் வரை செலவு செய்திருக்காங்களய்யா!"

அன்று பௌர்ணமி. பொரித்த அம்மாமி அப்பளம் போல் சந்திரன் வானத்தில் திகழ்ந்தான். பட்சிஜாலங்கள் பாட்டிசைத்தன. தென்றல் மெல்லென்று வீசியது. புஷ்பங்களில் நறுமணம் 'ஜம்'மென்று எங்கும் வியாபித்துக் கொண்டிருந்தது.

சொக்கலிங்கத்தின் உள்ளத்தில் நிஜமாகவே காதல் தோன்றியது. ஆனால் நனைந்த உடையுடன் காட்சியளித்த நங்கையிடம் தன் உள்ளத்தைத் திறந்து காட்டும் தைரியம் அவருக்கு இருக்கவில்லை. சினிமாவில் செய்வது போல் அவளை ஓடிப் பிடித்து, ஓடத்தில் வைத்து ஓட்டிச் செல்லலாமா என்று ஒரு கணம் நினைத்தார். ஆனால் அக்கரையிலிருந்த யானைகளையும், சிங்கங்களையும் நினைத்தபோது அவர் காதலே ஓடி விடும் போல் தோன்றியது! போதாததற்கு அதிரூபசுந்தரியின் பின்னல் உடம்பில் படும்போதெல்லாம், அது படமெடுத்து ஆடுவது போன்ற பிரமை ஏற்பட்டது.

இந்த வேளையில் தாடி மீசையை உருவியபடி அவர்கள் முன் தோன்றினார் மந்திரவாதப் பேராசிரியர் கொச்சக்குட்டி மேனன். அவர் கையில் பிடித்திருந்த மண்டை ஓட்டைக் கண்டு நடுங்கினாள் அதிரூப சுந்தரி.

"இதைக் கண்டா அஞ்சுகிறாய்? ஒரு காலத்தில் 'மிஸ் யுனிவர்ஸ்' பட்டம் பெற்ற அழகியின் மண்டை ஓடு இது" என்று கூறி ஏதோ மந்திரம் ஜபித்தார் மந்திரவாதப் பேராசிரியர் கொச்சக்குட்டி மேனன். அது அடுத்த கணம் மாயமாய் மறைந்தது.

"என்ன டாக்டர் கொச்சக்குட்டி மேனன்! இந்த வேளையில் நீங்கள் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார் சொக்கலிங்கம்.

"மோகினிப் பிசாசுகளின் காதல் பண்ணும் முறையைப் பற்றி நான் ஆராய்ச்சி செய்து வருகிறேன். அதற்காக ஒரு மோகினிப் பிசாசை நான் தொடர்ந்து வந்தேன். பிசாசுகளிடையே விவாகரத்து உண்டு என்று இன்றுதான் எனக்குத் தெரியும். கட்டின காட்டேரியைக் கைவிட்டு விட்டு வேறு பிசாசுடன் வாழ்க்கை நடத்தும் ஒரு மோகினியைப் பேட்டி கண்டேன். பிசாசு உலகத்தில் விவாகரத்து ரொம்ப சகஜமாம்; சட்டப்படியும் செல்லுமாம்..." என்று பேசிக் கொண்டு போனார் மந்திரவாதப்பேராசிரியர்.

"பிசாசுகளை விட்டுத் தள்ளும்! பிழைக்கும் வழியை முதலில் பார்ப்போம்! உமக்கு மாயமாக மறைந்து வேறு ஊருக்குச் செல்லும் வித்தை தெரியுமா?"

"இதென்ன கேள்வி? என்னுடைய ஜூனியர் சிஷ்யர்கள்கூட இந்த வித்தையைப் பண்ணுவார்களே!"

"அப்படியென்றால் என்னையும் அதிரூப சுந்தரியையும் மாயமாக மறைக்க முடியுமா? வேறு ஊருக்கு எங்களை அனுப்ப முடியுமா?"

"நீர் போய் விட்டால் கல்லூரி என்னமா நடக்கும்? நாங்கள் எல்லாம் எப்படிப் பிழைப்போம்?"

" மாஜிக் நிபுணரே! கோபித்துக் கொள்ளாதீர்கள்! என்னுடைய கல்வித் திட்டம் கோவிந்தாவாகி விட்டது. இனி மேல் நான் இந்த ஊரில் தலைகாட்ட முடியாது. உலகின் வேறு மூலைக்கு என்னை அழைத்துச் செல்லுங்கள்."

"அங்கே போய் என்ன செய்வீர்?"

"முதலில் அதிரூப சுந்தரியை அவள் சம்மதித்தால், கல்யாணம் செய்து கொள்வேன்."

அதிரூபசுந்தரி வெட்கித் தலை குனிந்தாள். தொடர்ந்து, "எனக்குப் பூரண சம்மதம்" என்று கூறினாள்.

"கல்யாணம் முடிந்தவுடன் ஒரு 'டுட்டோரியல்' காலேஜ் தொடங்கி அதற்குப் பிரின்ஸிபாலாவேன். மற்ற காலேஜுகளுக்கு மாணவர்கள் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும், டுட்டோரியல் காலேஜுக்கு எப்பொழுதும் மாணவர்கள் கிடைத்துக் கொண்டே இருப்பார்கள். பரீட்சைகள் இருக்கும் வரையில் தோல்வியும் இருக்கும். என்னுடைய பிழைப்பைப் பற்றி நான் கொஞ்சமும் கவலைப்பட வேண்டியதே இல்லை" என்றார் சொக்கலிங்கம்.

# நிமிஷக் கதைகள்




வாடகைக்காரர் வீட்டைக் காலி செய்து கொண்டிருந்தார். வீட்டுக்குச் சொந்தக்கார அம்மா அப்பொழுது அங்கு வந்தாள். நாற்காலி ஒன்றில் ஒரு சிறு ஓட்டை இருந்ததைச் சுட்டிக் காட்டி, "இந்த நாற்காலியை ஓட்டையாக்கி விட்டீர்களே! இதன் பெறுமானத்தை நீங்கள் தந்தாக வேண்டும்!" என்றாள்.

"நான் இந்த நாற்காலியை ஓட்டையாக்கவில்லை. நான் சிகரெட்கூடக் குடிப்பதில்லை, சிகரெட் துண்டு பட்டுத் தீய்ந்து போயிருக்குமோ என்று யோசிப்பதற்கு. அதனால் நான் இதற்கு நஷ்டஈடு தர முடியாது!" என்றார் வாடகைக்காரர்.

வீட்டு எசமானியம்மாளுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. "நல்ல ஆள் ஐயா நீங்கள்! எனக்குத் தெரிந்து பத்து வாடகைக்காரர்கள் காலி செய்து விட்டுப் போயிருக்கிறார்கள். யாரும் இந்த நாற்காலி ஓட்டைக்கு ஈடு தராமல் போனதில்லை. உமக்கு மட்டும் என்ன கொம்பு முளைத்திருக்கிறதோ?" என்றாள்.

ஃ ஃ ஃ

"ஐந்தும் இரண்டும் ஏழுன்னு குழந்தை கூடச் சொல்லுமே. உனக்குச் சொல்லத் தெரியல்லியே!"



"அது என்ன அதிசயம்! குழந்தையா யிருக்கிறபோது நான் கூடத்தான் சொன்னேன்!"

ஃ ஃ ஃ

புகழ்பெற்ற புரட்சியாளரான ராஸ் பிஹாரி போஸ் வழக்கறிஞராகப் பணியாற்றி வந்த காலம். அவரிடம் ஒரு வழக்கம் என்னவென்றால், சட்டப் புத்தகங்களிலிருந்து எண்ணற்ற மேற்கோள்களை எடுத்துக் காட்டிக் கூடியிருப்பவர்கள் எல்லோரையும் அதுரக்கச் செய்து விடுவார்.

ஒருசமயம் அப்படித்தான் ஒரு நீதி மன்றத்தில் ஏறக்குறைய ஒரு மணி நேரம் தம் வாதங்களைக் கூறினார். நீதிபதி அலுத்து விட்டார். கேட்கத் தோன்றவில்லை. அவர் முகத்தில் அலட்சிய பாவம் தொனித்தது.

ராஸ் பிஹாரி போஸுக்கு இது உறுத்திற்று. "நீதிபதி அவர்கள் என் வாதத்தைச் செவிமடுக்கிறார்களா.....?" என்று கேட்டார்.

"தாராளமாக. ஆனால் வாதங்கள் ஒரு காதில் விழுகின்றன. இன்னொரு காது வழியாக ஓடி விடுகின்றன. மூளையில் நிற்க மாட்டேன் என்கின்றன!" என்றார் நீதிபதி.

ஒரு கண நேரத்துக்குப் போஸ் ஸ்தம்பித்து விட்டார். ஆனால் அடுத்த கணமே, "மறந்து விட்டேன். நீதிபதி அவர்கள் சொல்வது முற்றிலும் உண்மை. இரண்டு காதுகளுக்கும் இடையே உள்ள இடம் நீதிபதிக்குக் காலியாக அல்லவா இருக்கிறது! இந்தக் காது வழியாக வருவது அந்தக் காது வழியாகத் தடங்கலுறாமல்போய் விடுகிறது என்றால், நீதிபதி அவர்களால் என்ன செய்ய முடியும்? அவரைப் படைத்த ஆண்டவன் 'அதை' அவருக்கு வைக்க மறந்து விட்டானே!" என்று ஒரு போடு போட்டார்.

ஃ ஃ ஃ

வாஷிங்டன் ஜனாதிபதியாயிருந்த காலம். அங்கத்தினர் ஒருவர் அமெரிக்கப் படையை மூவாயிரமாகக் குறைக்க வேண்டும் என்று தீர்மானம் கொண்டுவந்தார்.

இந்தத் தீர்மானம் அவைக்கு முன் வைக்கப்பட்டபொழுது ஜனாதிபதி வாஷிங்டன் ஒரு திருத்தம் செய்ய அநுமதி கோரினார். மற்ற அங்கத்தினர்களுக்கு இது பெரும் ஏமாற்றமாகி விட்டது. வாஷிங்டன் இதை அடியோடு எதிர்ப்பார் என்று எண்ணினார்கள். ஆனால், அவரோ திருத்தப் பிரேரணை கொண்டு வர மட்டுமே விரும்பினார்.

அநுமதி பெற்று வாஷிங்டன் திருத்தப் பிரேரணையைக் கூறினார். "இந்தத் தீர்மானத்தில் இரண்டொரு வார்த்தைகளைச் சேர்த்து விட்டால் – நன்றாயிருக்கும். அமெரிக்க விரோதிகள் அமெரிக்காவின் மீது படையெடுத்தால் எந்தக் காரணம் கொண்டு இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட படை வீரர்களை அவர்கள் ஏவக் கூடாது என்று ஒரு வரைமுறை விதிக்க வேண்டும். அவர்கள் இதற்கு ஒப்புக் கொண்டால் மூவாயிரமாக நம் படையைக் குறைக்க எனக்கு ஆட்சேபணை இல்லை!" என்றார். கூட்டத்தில் சிரிப்பொலி அடங்க எத்தனை நேரம் பிடித்ததோ, தெரியவில்லை. அப்புறம் அந்தத் தீர்மானத்தைப் பற்றிப் பேச்சே எழவில்லை.

ஃ ஃ ஃ

மனைவி: எனக்கு வெட்கமாயிருக்கு. உங்களைப் பார்த்தால் குழந்தைக்கு மீசை வைச்ச மாதிரி இருக்குன்னு எல்லோரும் பரிகாசம் பண்றா.



கணவன்: அதுக்காக நான் அதை எடுக்கப் போறதில்லை. அப்புறம் முகக்ஷவரம் செய்துகொண்ட குழந்தைமாதிரி இருக்குன்னு சொல்லுவா!

ஃ ஃ ஃ

"அம்மா! அம்மா! சீக்கிரம் புகைப்படக் காமிராவை எடுத்துக் கொடேன்!"

"என்னடா அவசரம் அவ்வளவு?"

"நல்ல காட்சியம்மா! அப்பா சேற்றிலே விழுந்திருக்கிறார். படம் பிடித்தால் ரொம்ப ரொம்ப நன்றாயிருக்கும்!"

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon